கேசி—(1) ஓரசுரன். தேவ சேனையை எடுத்துச்சென்ற இந்திரனெதிர்ப்பத் தோற்றுவிடுத்தவன் (2) உபமந்யுவைத்தரிசிக்கவந்த கிருஷ்ண மூர்த்தியை அயவடிவேற்றுச்சென் றெதிர்த்துப் போர்புரிந்திறந்த ஓரசுரன் (3) யதுமரபினன். வசுதேவன் மகன். இவன்தாய்பத்திரை.

கேசித்துவஜன்—ஓரரசன். நிமிமரபினன். காண்டிக்கியனிற்காண்க.

கேசினி—தயமந்தியின்தோழி.

கேதனன்—ஓர் ஆந்திரகவி. அபிநவதண்டியெனும் பட்டமபெற்றவன்.

கேதாரம்—ஒருசிவக்ஷேத்திரம். இமாசலத்திலுள்ளது.

கேதாரேசுவரர் } (1)திருக்கேதாரத்
கேதீசுவரர் } திலும், (2) திருக்கேதீச்சரத்திலும் சிவ பெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

கேதாரேசுவரிவிரதம்.— ஐப்பசிமாசகிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியில் அநுஷ்டிப்பதொருவிரதம். இதுசுமங்கலிகட்குரியது.

கேது—விப்பிர சித்திக்குச் சிங்கிகையென்பாளிடம்பிறந்தவன். இவன் அக்கினிக்கு விகேசியென் பாளிடம்பிறந்ததாகவும் நூல்கள் கூறும். இராகுவிற்காண்க.

கேதுமதி—காந்தர்வ ஸ்திரீ. சுமாலியென்னு மிராக்கதன் மனைவி.

கேதுமந்தன்—(1) நான்குலோகபாலகர்களிலொருவர் (2) கலிங்கநாட்டரசனை சுருதாயுபுத்திரன் (3) தந்வந்திரிபுத்திரன். இவன்புத்திரன் கேதுரதன். [ன்று.

கேதுமாலம்—நவ வருஷங்களிலொ

கேதுரதன்—கேதுமந்தன் மகன். இவன் மகன் பகீரதன். [த்தி

கேமசரி—சீவகன் மனைவியரிலொரு

கேமமாபுரம்—சுபத்திரனூர் [சீவக

கேரளம்—(1) மலையாளம். கேரளன் தேசம். (2)ஒருபாஷை. பஞ்சதிராவிடங்களிலொன்று.

கேரளன்—திஷ்டியந்தன் பௌத்திரன். ஆசிரிதன் புத்திரன் - இவன் கண்ட நாடு கேரளம்.

## கை

கைகசி—சுமாலி புத்திரி-விச்சிரவசுவின் இரண்டாமனைவி. இராவணகும்பகர்ண விபீஷண சூர்ப்பணகை இவர்களைப் பெற்றவள்.

கைகேயி—கேகய ராஜகுமாரி-தசரதன்மூன்றுமனைவி. பரதனைப்பெற்றவள். தசரதன் இவளிடத்தில்மிக்க அன்புடையவனா யிருந்தான். இராமனுக்கு மகுடாபிஷேகஞ் செய்விக்க யாவுஞ்சித்தமாயிருக்குஞ்சமயத்தில், கூனியாகிய மந்தரையென்னும்.தோழி போதனையால், முன்தான் வேண்டும் போது கொடுப்பதாகத்தசரதன்சம்மதித்திருந்த இரண்டு வரங்களையும் இப்போது தருகவென, தசரதன் தந்தேனென, ஒன்று தன் மகன் பரதன் நாடாளவும், ஒன்று இராமன் வனஞ் செல்லவுங்கேட்க, தசரதன் தன் சொல்லைமறுத்தற்கஞ்சி அங்ஙனமேயாகுகவென்றுபுத்திரனைப்பிரிந்து உயிர்நீத்தற்குக் காரணமாயிருந்தவள்.

கைடவன்—ஒரு கற்பத்தில் திருமால் யோக நித்திரையில் காதிரண்டினிற்குறும்பியில் மதுவென்றும்கைடவனென்றும் இரண்டசுரர்கள்பெருகிவோடு தோன்றிப்பிரமனையுந் திருமாலையுந் துன்புசெய்ய, திரு

மால் இவர்களை இதமாகக்கொல்ல வேண்டுமென்று கருதிஉங்கள்வல்லபத்திற்கு வியந்தேன். நீங்கள்விரும்பியவரத்தைக்கேட்டால் தருவேனென, இருவரும் எங்கட்கு வரமொன்றும் வேண்டாம். உமக்கு வேண்டுமாயின் நாங்கள் அதுதருவோமென, திருமாலஇஃதுண்மையாயின்நீங்களிருவரும் என்னாலிறக்கவென வரங்கேட்டு அவ்வாறே கொன்று மதுசூதனன் கைடபாரி எனு நாமங்களையடைந்தனர்.

கைலாசநாயகி — திருக்காருயலில் உமாதேவியார் திருநாமம்.

கைலாசம்— கிலாசமுனிவர் சிவபெருமானை நோக்கித்தவங்கிடந்து அவரைத் தாங்கும் ஆற்றலுற்று மலைவடிவான்மையின் இப்பெயராயது. இது உலகிலுள்ள ஆயிரத்தெட்டுச் சிவ க்ஷேத்திரங்களி லொன்று. இது இமாசலகைலாசம், மேருகைலாசம், மந்தரகைலாசம், தக்ஷிணகைலாச முதலாகப்பல. வெள்ளிமலையாகிய இமாசலகைலாசமே சிறப்பாகநூல்களிற் கூறப்பட்டது. அதனையே இராவணனெடுத்துத் தன் புற்றனன். சிவபிரான் அங்கே நவரத்நகசிதமான பெரிய தோராலயத்தில்நந்தி பிருங்கி மகாகாளர் முதலிய பிரமதகணங்களும் தேவகந்தர்வ யக்ஷகின்னராதி பிறணங்களும்பணியமுனிவர் முதலியோருக்கு அநுக்கிரகிப்பர். அது ஊழிதோறோங்குமோங்கலென்ப.

பிருகிருதிதத்துவத்தின் மேலே அப்பிராகிருத கைலாசமுள்ளது. இதுசிறந்ததீக்ஷாவான்களடையத்தக்கது. இதுவே சிவலோகம். இதுவும்இதன்மேலுள்ள சிவலோகங்களும்சிவபிரானுக்கு வாசஸ்தானம். இங்குற்றோர் நித்தியராகவாழ்வர்.

## கொ

கொங்கணம்—மேற் கடற் கரையில் கேரள தேசத் துத்தரத்தி லுள்ள ஒருதேசம்.

கொங்கணர்—பதினெண் சித்தர்களிலொருவர். இவர்செய்ததாக வைத்தியம் பஞ்சபக்ஷி கருக்கிடை எனச் சிலநூல்கள் விளங்குகின்றன.

கொங்கர்—கொங்குநாட்டரசர்

கொங்கிலாச்சான்—வைணவசிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வருளொருவர்.

கொங்கிளங் கோசர்—சிலப் பதிகாரக் கதை நிகழ்கையிலிருந்த ஓரரசர்.

கொங்குநாடு—குடநாடு.

கொச்சைவயம்—சீகாழிக் குரிய பன்னிருதிருநாமங்களிலொன்று. பராசரமுனிவர் மச்சகந்தியைப் புணர்ந்து—லுக்குற்ற துர்க்கந்தம் நீங்கப் பூசித்தது என்பதுகாரணம்.

கொடிக்கவி—சித்தாந்தசாத்திரம் பதினான்களுளொன்று. ஒருகலித்துறையும் மூன்று வெண்பாக்களுமுடையது. ஞான முதலிய சாதனங்களையும் அவற்றையடைந்தார் பெறும் பயனையுங் குறித்து உமாபதி சிவாசாரிய ரருளியது. சிதம்பர நடராஜப்பெருமானது உற்சவ தொடக்கமொன்றில், ஏறாதுநின் றிருந்த துவஜத்தை ஏறும்படி இந்நூல் செய்யப்பட்டதாதலின்கொடிக்கவியெனும் பெயரேற்றது.

கொடிஞாழன் மணிப்பூதனார் — திருவள்ளுவமாலைசொல்லியகடைச்சங்

கப் புலவருளொருவர்.

கொடியிடைநாயகி—வடதிரு முல்லை வாயிலில் உமாதேவியார்திருநாமம்

கொடுங்கலூர்—கொடுங்கோளூர்

கொடுங்குன்றேசர்—திருக்கொடுங்குன்றத்தில் சிவபிரானுக்குவழங்குந் திருநாமம்.

கொடுங்கோளூர்—திருவஞ்சைக் களத்திற்கு நாமாந்தரம். இது சேர நாட்டிலுள்ளது. இஃதிக்காலத்துக் கொடுங்கலூரென வழங்கும்.

கொடுந் தமிழ் நாடு—செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த தென்பாண்டிகுட்ட முதலிய பன்னிருநாடுகள்.

கொடு முடி நாதர்—திருப் பாண்டிக் கொடுமுடியில் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

கொடும்பை—பாண்டிநாட்டிலுள்ளகொடும்பாளூர். பூர்வம்உறையூரிலிருந்து மதுரைக்குச் செல்லும்வழியெனச் சிலப்பதிகாரத்தாலறியப்படுகிறது.

கொட்டி—கொடு கொட்டி யாடல். புறநாடகம் பதினொன்றனுளொன்று. திரிபுரந்தீமடுத்தெரியக்கண்டு ஜயாநந்தத்தால் சிவபெருமான்கை கொட்டியாடியது. கொட்டிச்சேதமென்றும் பெயர்பெறும். இதற் குறுப்பு பதினான்கு.

கொண்கானங்கிழான்—கொண் கான மலைக்குத்தலைவன். (கொண்கானம் —கொங்கணம்) ஈகையும்வெற்றியுமுடையோன். இவனைப்பாடியபுலவர் மோசிகீரனார். [புறநா]

கொம்பிளங் கோதை—திருவைகல் மாடத்தில்உமாதேவியார்திருநாமம்

கொல்லிமலை—வல்விலோரியின்மலை

கொல்லிமழவன்—மழநாட்டிற் கிறைவன் - திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள் திருவருளால் தன் மகளுக்குற்ற முயலகனெனும் நோய் நீங்கப்பெற்றவன்.

கொற்கை — பாண்டியராசர்களின் பழைய இராஜதானி. சிலப்பதிகார நிகழ்கையில்இந்நகரத்திருந்தவெற்றிவேற் செழியனே வெற்றிவேற்கையயற்றியவன் இது இப்பொழுது சிற்றூராயிருக்கிறது. இதற்கொரு காத தூரத்திலேயுள்ள இடைச்சேரியிலேதான்சால்யென்பவன் ஆபுத்திரனைப் பெற்றான்.

## கோ

கோகம்பளன்—நரி வயிற்றிற் பிறந்த ஒரு முனிவர். இவர்க்கு ஆசிதகேசகம்பளரெனப் பௌத்த நூலிற் பெயர் காணப்படுகிறது. [மணி]

கோகர்ணநாயகியம்மை — திருக்கேதீச்சுரத்தில் உமாதேவியார் திருநாமம்.

கோகர்ணம்—கேரள தேசத்திலுள்ள ஒரு சிவாலயம் - இராவணன்சிவப்பிரசாதமாகப்பெற்ற இலிங்கத்தை இலங்கையிற் சேர்க்கப்படாதெனக்கருதியதேவர்கள் வருணனால்அவன்வயிற்றை நிரப்பி ஐங்கரரை அந்தணராக வனுப்ப, அவன் நீர்கழித்துவருமெல்லையுந் தாங்குகவென வேண்ட, ஐங்கரர்மும்முறைவிளிக்கு முன்வராவிடின் நிலமிசைவைத்துச் செல்லு வேனென் றிணங்கியேற்று, அங்ஙனமே மும்முறைவிளித்துப்பூமியில் வைக்க அவ்விடத்தே வேரூன்றியது. இராவணன் தன் காரியத்தைமுடித்து,சௌசஞ்செய்து கொண்டு அதனையெடுப்ப அது வராமையின் தன்பலங் கொண்டெ

ப்ப, [கேர்கர்ணம்] பசுவின் காது போலக் குழைந்தமையின் கோகர் ணேச ரென்றும் மகாபலலிங்கமெ ன்றும் பெயர்கள் பெற்றது. இது மகா புண்ணிய க்ஷேத்திரம்.

கோகுலம் — கிருஷ்ணன் வளர்ந்தவி டம். இது யமுனைக் கரையிலுள்ள ஆயர்பாடியிலுள்ளது.

கோகுலேசர் — திருக் கோழம்பத்தி லே சிவபெருமான் திருநாமம்.

கோசர்- கொங்குநாட்டரசர்.கண்ணகி க்கு ஆலயமெடுப்பித்துத் திருவிழா முதலியசிறப்புச்செய்வித்தவர்.

கோசலம்—சரயுநதிக்கருகிலுள்ளஒரு தேசம். இதன் இராஜதானிஅயோ த்தி. இத்தேசம் இக்ஷ்வாகுமரபின ர்க்குரியது. இது உத்தர கோசல மென்றும், பிற் காலத்தில் இராமர் மகன் குசன்குசஸ்தலியென்றொரு இராஜதானி நகரும் ஸ்தாபித்தது தக்ஷிணகோசலமென்றும் சொல்ல ப்படும்.

கோசலை—இராமன்தாய். இவர்க்குக் கௌசல்யையென்றும் பெயர்.

கோச்செங்கட் சோழநாயனுர்—அறு பான் மூவரை நாயன் மாருளொரு வர். இவர் தந்தை சுபதேவனெனு ஞ்சோழன். தாய் கமலவதி, அவள் இவரைப் பிரசவிக்குஞ் சமயத்தில் அங்கே குழுமியிருந்த சோதிடர் சிலர், இன்னும் ஒருநாழிகைகழித் துப் பிரசவித்தால் திரிலோககர்த்த ஞயிருப்பானெனக்கேட்டு, ஒருநா ழிகை காலம் அடக்கிவைத்திருந்து பிரசவித்து, அளவுக்குமேல் வயிற் றிலிருந்ததால் கண்கள் சிவந்திரு க்கக்கண்டு 'கோச்செங்கண்ணன்'' என்விளித்துஇறந்தனள். இதுவே யிவர் பெயராயது. இவர் முற்பிற ப்பில் திருவானைக் காவில் ஜம்பு கேசுவரர்க்குவிதானங்கட்டிய சில ந்தி யெனப் பெரிய புராணத்திற் கூறப்பட்டுளது. இவர் சோழநாட் டில் நன்னிலம் அம்பர் முதலிய விடங்களில் அநேக சிவாலயப் பிர திஷ்டைசெய்தவர். பாரதயுத்தமு டிந்தவுடனேஅரசராயினரென்பது கலிங்கத்துப்பரணியாலறியப்படும் திருஞான சம்பந்தமூர்த்தி ஸ்வாமி கள் தேவாரத்திலும், திருமங்கை யாழ்வார் ஆறும்பத்தில் ஆருந்திரு மொழியிலும் எடுத்தோதப்பெற்ற வர்.சோழன்செங்கணுனிற்காண்க.

கோச்சேரமான் யானைக்கட்சேய்மா ந்தரஞ்சேரலிரும்பொறை—கொ ல்லிமலைக்குத்தலைவன். யானையின துபார்வைபோலும் பார்வையுடை யவன். விளங்கி லென்னுமூர்க்குப் பகைவராலுண்டான துன்பத்தை யொழித்தவன். தொண்டிநகரத்தர சாண்டவன்.கபிலர்நண்பன். பாண் டியன தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ் செழியனுற்கட்ட ப்பட்டுப்பின்பு அதனை நீக்கிக்கொ ண்டு புகழ் பெற்றவன். சோழன் இராஜசூயம் வேட்டபெருநற்கிள் ளியொடு போர்செய்தவன். எட்டு த்தொகையு ளொன்றான ஐங்குறு நூறு தொகுப்பித்தவன், இவனைப் பாடினோர் குறுங்கோழியூர்கிழார், பொருந்தில் இளங்கீரனுர், கபிலர் முதலியோர் [புறநா]

கோடிசிலை—சுராமைநாட்டிலொருமலை

கோடி சூரேசுவரர்—திருக் கோடிகா வில் சிவ பெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

கோடேந்துமுலையம்மை—திருஇலம்பயங் கோட்டூரில் உமாதேவியார் திருநாமம். [மலை.

கோடை — கடிய நெடு வேட்டுவன்

கோட்கூச் சவ்வை—திருக்கோளூர் சிவதேவசரணர் திருமகள். சரணரொரு நாள் அயலூர்க்குச் செல்லுகையில் இவ்வம்மையை இறைவர்க்குப் பால்நிவேதிக்கவென, இறைவர் பாலைப் பருகிவிட்டனர் - அது கேட்ட சரணர் மறுநாள் அங்ஙனமே பாலைக் கொடுத்தனுப்பி மறைந்துபார்த்திருப்ப, பால்பருகப்படாமையின்சினந்து அடிக்கையில், சிவபெருமானால் எடுத்து மடியில்வைத்துக் கொள்ளப் பெற்றவர். வீரசைவர்.

கோட்புலி நாயனார்—அறுபான் மும்மைநாயன்மாருளொருவர். சோழநாட்டில் நாட்டியத்தான் குடியென்னுமூரில், வேளாண்குலத்திலே அவதரித்துச் சேனாபதியாயமர்ந்து அவ்வூதியத் திற்கு நெற் கொண்டு சிவனடியவர்க்கும் சிவாலயத்திற்கும் செலவிடக்கட்டிவைத்து, அரசன் கட்டளைப்படி போருக்குச்சென்றிருந்து மீண்டுவந்துபார்க்க, அந்நெல்லைத் தமர்உறவினர் செலவிட்டதறிந்து அவரைத் தமதுவாளால் வீழ்த்திச் சிவபதமடைந்தவர்.

கோணேசுவரர்—(1) திருக்குடவாயிலிலும், (2) ஈழத் துற்ற திருக்கோணமலையிலுஞ் சிவ பெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

கோதம முனிவன்—சதானந்த முனிவன் பிதா. அங்கிரச வமிசத்தவன் இவன் மனைவி அகலிகை.

கோதமனார்—திரு வள்ளுவ மாலைபாடிய கடைச்சங்கப் புலவருளொருவர். இவர் கௌதமனாரெனவும், பாலைக்கௌதமனாரெனவுஞ் சொல்லப்படுவர். பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்தினைப் பாடி, இமயவரம்பன்றம்பி பல்யானைச் செல்புகழ்க் குட்டுவனூற் சுவர்க்கம்பெற்ற ஓரந்தணர். இன்னும் இவராற் பாடப்பெற்றோன் தருமபுத்திரன்.

கோதமை—ஒருபார்ப்பனி. சார்ங்கலன்தாய் [மணி]

கோதாவரி—(1) ஒரு புண்ணிய நதி. கௌதமருக்காகப் பிரவகித்து வந்தமையின் கௌதமி யென்றும் பெயருற்றது பிரம கிரியிலுள்ள அத்திமரத்தின் வேரினின் றுண்டாவது. (2) நந்தகோன்மனைவியரிலொருத்தி.

கோத்திரபித்—இந்திரனுக்கு நாமாந்தரம. மலைகளின சிறகை வெட்டியவனென்பது பொருள்.

கோபதி—(1) இந்திரன் (2) அங்கிரசன்வமிசதது ஒரகஷி.

கோபராஷ்டிரம்—கொங்கண தேசத்திற்குதெற்கிலுள்ள பூமி.

கோபாலர்—கிருஷ்ணனோடு ஆயர்பாடியில் வளர்ந்த இடையர்.

கோபானன்--யயாதியின் புத்திரனான துருவசனுடைய பௌத்திரன்.

கோபிகைகள் } கோபியர் } கிருஷ்ணன்வளர்ந்த இடைச் சேரியில், அக்காலத்தில் வளர்ந்த இடைப்பெண்கள். இவர்கள் தொகையால் பதினாறுயிரவர். ஜன்மாந்தரத்தில் விஷ்ணுபக்தர்களாதலின் அப்பொழுது அவரை யணைந்துமகிழ்ந்தவர்கள். இவர்கள் பதினாறுயிரவர் வீடுகளிலும் ஒரேகாலத்தில் கிருஷ்

னன் ஒவ்வொருத்திக்கொவ்வொரு வடிவெடுத்தனன். யமுனையில்நீரா டுகையில் அவர்கள் உலரும் படி வைத்த வஸ்திரங்களை யெடுத்துக் கொண்டு மரத்திலேறி அவர்களை மேலேவந்து கைகூப்பி வணங்கும் படி செய்து கொடுத்தனன். இக் கோபிகைகள் இறுதியில் அவரது பத்தர்களாகி முத்தியடைந்தனர்.

கோபேந்திரகன்னி--கிருஷ்ண னுக்கு முன்னுதித்த மாயை.

கோப்பிரேக்ஷகம்—பிரமனுற்காசியிற் சிவலிங்கப் பிரதிட்டை செய்யப் பட்ட இடம். இது கைலாயத்தை யொத்தமகிமையுடையது [சைவபு]

கோப்பெருஞ்சோழன்— உறையூரை இராசதானியாகக் கொண்ட ஒரு சோழன். கவிப்புலமை மிக்கவன். பிசிராந்தையார்க்கும் பொத்தியார்க்கும் உயிர்த்தோழன். தன்னொடு முரணிய இரு புதல்வருடன்போருக்கெழும்போது புல்லாற்றூர் எயிற்றியனாரால் பாடிச் சாந்தஞ்செய்யப் பட்டவன். பின்னர்த் துறவு பூண்டு வடநாட்டி விருந்து, தன்னுடன் உயிர்நீத்தற்கு வந்த பிசிராந்தையாரோடு சுவர்க்கம் புகுந்தவன். பொத்தியாரை மகன்பிறந்த பின்னர் வருகவென்று தான் உயிர்நீத்தும் அவ்வாறு வந்த அவர்க்கு இடங் கொடுத்தவன். இவனைப்பாடியபுலவர் பிசிராந்தையார் - புல்லாற்றூ ரெயிற்றியனார் - பொத்தியார் - பெருஞ் சதுக்கப் பூதநாதனார் முதலியோர். [புறநா]

கோப்பெருந் தேவி—நெடுஞ் செழியன் மனைவி. தன்கணவன்கண்ணகிக்கு வழக்கில் தோற்றுஇறந்தமை தெரிந்து உடனே உயிர்விட்டவள் இவளை அறக்கற்புடையா ளெனச் சிலப்பதிகாரங் கூறும்.

கோமடத் தாழ்வான்—வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வரி லொருவர்.

கோமதி—இமாசலத்தி லுற்பத்தியாகிக்கோசலதேசவழியாய்ச்சென்று கங்கையிற்கலக்கும் ஒருநதி.

கோமுகன்—சாகல்லியன் சீஷன்.

கோயில்—(1) சிதம்பரம் (2) திருவரங்கம்.

கோயிலாழ்வான்—வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வரு ளொருவர்.

கோரக்கநாதர்—நவசித்தரு ளொருவர்.

கோலாகலன்— இமவான் மகன்-மைநாகன்தம்பி [மலைக்கரசாக அதில் வசித்தோரை மலையின் பெயராற் கூறுவது பண்டைய வழக்கு.]

கோல்வளை யம்மை—திருக்கருப்பறியலூரில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

கோவகாமர்—புத்தர்களில்இருபத்தாருவதாகத் தோன்றியவர்.

கோவர்த்தனம்—ஒருமலை-மதுராபுரிக்கருகிலுள்ளது. கோபாலர்கள்இந்திரனுக்கிட்ட பொங்கல்முதலியவற்றைக் கண்ணன் தடுத்தபொழுது இந்திரனுற் பெய்வித்த கன்மழையைத் தடுக்கக்கிருஷ்ணனுற்குடையாக எடுக்கப்பட்டது. [இங்குமதுரையென்பது சென்னைராஜதானியிலுள்ள மதுரை யன்று. சப்தபுரிகளிலொன்று.]

கோவலன்—(1) சிலப் பதிகார கதாநாயகன். பிறப்பால் வைசியன். கண்ணகியின் கணவன். மணிமேக

லையின்பிதா. இவன் ஒரு கணிகை நிமித்தமாக, தன் திரவியமெல்லாம் செலவிட்டு, தன் கற்புடைப்பத்தினியாகிய கண்ணகியோடு காவிரிப்பூம்பட்டினநீங்கிப் பொருள்தேடக் கருதி மதுரையையடைந்து, அங்கே தன் மனைவி கண்ணகியின் காற்சிலம்பொன்றை விற்கக்கருதி ஒரு பொற்கொல்லன் வீட்டையடைந்தபோது, அவன்சூதினால் அரசனரண்மனைச் சிலம்பு திருடிய கள்வனெனப் பாண்டியனால் வெட்டப் பட்டவன். வஞ்சிநகரத்தேயுள்ள கோயிற் கற்பின்தெய்வமாகிய கண்ணகியின் வடிவத்தோடு இவன வடிவமும் பூசிக்கப்பட்டுவந்தது. (2) மேற்கூறியகோவலனுக்கு ஒன்பதுதலைமுறை முற்பட்டவன. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குக் காதற்பாங்கன். அவ்வேந்தனுக்குச் சாரணர்கூறிய உபதேசமொழியைத்தானுங்கேட்டுத்தானும் தன முன்னோருந்தேடியபொருள்களை யெல்லாம் ஏழுநாட்களில் தானஞ் செய்து விட்டுத் தவம்புரிந்தோன். வஞ்சிநகரிற் புத்தருக்குச் சைத்தியாலய மொன்று கட்டுவித்தோன்.

கோவிந்த யோகி — சங்கராசாரியர் குரு. நருமதைதீரத்தி லிருந்தவர்.

கோவிந்தன்—(1) பிருகற்பதி (2) கிருஷ்ணன், பசுவைக் காப்பவன் (3) விசையைசகோதரன். சீவகன் புத்திரரி லொருவன்.

கோவிந்தை—நந்தகோபன் புதல்வி, பதுமுகன் மனைவி [சீவக] [ண்க.

கோவூரழகியார்—கோவூர்கிழாரிற்கா

கோவூர் கிழார்— திருவள்ளுவமாலை பாடிய கடைச்சங்கப்புலவருளொருவர். இவர் பெயர் கோவூரழகியாரென்றும் வழங்கும். இவராற்பாடப்பட்டோர் சோழன் நலங்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், காவிரியாற்றுத்துஞ்சியநெடுங்கிள்ளி, சோழன்குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன், சிறுகுடி கிழான் பண்ணன். இவர் சோழன்நலங்கிள்ளி யிடத்திருந்து உறையூர்புக்க இளந்தத்தனைக்காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானெனக் கொல்லப் புக்கவிடத்து, அவனைப்பாடி இளந்தத்தனைப்பிழைப்பித்தவர். எட்டுத்தொகையில் இவர் பாடல்கள் சிலவுள.

கோழி—உறையூர். ஒருகாலத்தில் இவ்வூரி லிருந்த கோழி யொன்று யானையைப் போர்செய்துவென்றமையால் இவ்வூருக்கு இதுபெயராயது.

கோளகன—சாகல்லியன் சிஷ்ன்.

கோளிலிநாதர், கோளிலியப்பர் —திருக் கோளிலியில்சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார்—சேரமான் குட்டுவன்கோதை - சோழன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி - ஏனாதிதிருக்கிள்ளி - ஈரந்தூர்கிழான் - தோயன் மாறன - சோழன் குராப் பள்ளித்துஞ்சிய பெருந திருமாவளவன்- சோழிய ஏனாதி திருக்குட்டுவன் முதலானோரைப் பாடியபுலவர்.

கோனேரியப்பநாவலர்—காஞ்சிநகரத்திருந்த ஒருசெங்குந்தப்புலவர். ஸ்காந்தபுராணத்தின் சிவரகசியகண்டத்தி லுள்ள ஏழாவது காண்

டமாகிய உபதேச காண்டத்தைக் கற்பனை யலங்காரமே சொன்னயம் முதலியன நிரயபிய சிறந்த தமிழ்க் காவிய மாகச் செய்தவர். இவர் சிறந்த வரகவியென்பது அந் நடையாலே விளங்குகின்றது.

கோஷமணி—பாண்டவரில் நகுலன் சங்கு.

## கௌ

கௌசலை—(1) தசரதன் மனைவி. இராமன் தாய். (2) யயாதியின் மகனாகிய பூருவின் மனைவி. (3) வசுதேவன் மனைவி இவளுக்குப் பத்திரை யென்றும் பெயர்.

கௌசாம்பி—ஒருநகரம். குசாம்பியால் நிர்மிக்கப்பட்டது.

கௌசிகம்—உபபுராணங்கள் பதினெட்டனுளொன்று.

கௌசிகன்—(1) தாமவியாதனிடம் தர்ம விசேஷங்களைத் தெரிந்து கொண்ட ஒருவேதியன். (2) பிரதிஷ்டான புரத்திலிருந்த ஒருவேதியன். இவன் குஷ்டரோகி. இவன் மனைவி பதிவிரதையாதலின் இவனை அன்போடு பரிபாலித்துவருகையில், இவன் ஒருவேசியைக் கண்டு காமுற்றுத் தன் கருத்தை மனைவிக்குணர்த்த, அவள் அதற்குவேண்டியபொருளை உடன்கொண்டு இவனையுந் தோளிற் கட்டிக்கொண்டு அன்றிரவே வேசிவீட்டிற் செல்லும்போது இருள்மூடிக்கொண்டிருந்ததால் வழிதெரியாது செல்ல, தவசத்திலுட்கார்ந்திருந்த மாண்டவ்யமுனி சிரமிசைக் கௌசிகன் கால்மோத, முனிவர் சினந்து என் தலையிற் கால் வைத்தவன் விடியுங் காலத்திறக்கவெனச் சபித்தனர். அதுகேட்ட இவன்மனைவி பொழுது விடியற்கவெனச்சொல்லிப்போயினள். அதனால் பொழுதுவிடியாதாக, தேவர்கள் இஃதென்னென வியந்து திருமாலுக்குணர்த்த, திருமால் அத்திரி முனிமனைவியாகிய அநசூயையை யிடஞ்செலுத்த, அநசூயை அவளையடைந்து பொழுது புலர்கவெனக் கூறுகவென்ன, அவள் என் கணவனிறப்பானே யென, அநசூயை உன் கணவனிறவானென, வாக்களித்தனள், அவள்பொழுது புலர்கவெனப் பொழுதுபுலர்ந்தது, கௌசிகனிறந்து யவ்வனவுருவமடைந்தான் (3) ஒருமுனி தமதுதேகத்தைத் தீர்த்தமொன்றில் வைத்துவிட்டுப் பரகாயப்பிரவேசஞ் செய்து சஞ்சரிக்கையில் வைத்ததேகம் ஜீர்ணமாகி எலும்பு மாத்திரங்கிடக்க, அவ்வழியே சென்ற ஒரு சருவன் அங்கே தடைபட்டுவிழ, பாலகவ்வியமுனி அவனைக்கண்டு நீ இவ்வெலும்பைச் சரஸ்வதி நதியில்விட்டு மூழ்கினால் கங்கைவழியிற் செல்வாயென அவன் அங்ஙனமே செய்து போயினன். (4) விசுவாமித்திரன் (5) யதுமரபினனாகிய விதர்ப்பபாலகனெனுமவற் சவந்தன் வளர்த்த புத்திரன். (6) ஜராசந்தன் சேனாபதியாகிய அமைச்சன், (7) சனகபுரத்துள்ள ஓரந்தணன், சுமதியின் பிதா.

கௌசிகி—(1) கங்கையிற் கலக்கும் ஒருநதி. (2) காதிமகள். விசுவாமித்திரன் தங்கை. ருசிகன் மனைவி. சத்தியவதியென்றும் பெயரினள்.

கௌசிகித்தேவி—கௌரி கும்பநிசும்பரைக் கொல்லுதற்கெடுத்த வுருவம்.

கௌசிகபீடம்—அறுபத்து நான்கு

சத்தி பீடங்களி லொன்று. இது ஸ்ரீசந்திரகலையிலுள்ளது.

கௌச்சிகன்—ரிஷி. குச்சகமுனிவன் மகன். தவத்திலிருக்கையில், மிருகங்கள் உடற்றினவகீர உரைகல் போன்று தேய்க்க நின்றமையின், மிருககண்டேயனெனப் பெயர்பெற்றவன். இவன் மகன மிருகண்டு.

கௌடபாதாசாரியர்—ஸ்ரீசுகர்சீஷர். யதிகோவிந்த பகவத பாதருக்குக் குரு. உத்தரகீதைக்குப் பாஷியஞ் செய்தவர்.

கௌடபுரி—இலக்ஷ்மணபதி. வங்காளதேசத்தின் முக்கிய பட்டணம். ஜன்னுமுனிவ ராச்சிரமமிருந்தவிடம். இங்குள்ளபிராமணர் கௌடப்பிராமண ரெனப்படுவர்.

கௌடர்—கௌடபுரியிலிருந்த பிராமணர். இவர்கள் கல்விகேள்விநன்னடை முதலியன வுடையவர்.

கௌண்டில்லியர்—புத்தர்களில் ஐந்தாவதாகத் தோன்றியவர். [ணைக

கௌண்டிலலியன்—அஞ்சுலனிற்கா

கௌதமபுத்தர்— புத்தர்கள இருபத்தெழுவரில் ஒருவர்.

கௌதமர்பசு—கௌதமர்கோதாவரி தீரத்தருகே தவஞ் செய்கையில், துவாதசவருஷ க்ஷாம முண்டாக, அநேகருஷிகள் அவரையடைந்து காலங்கழிக்க விரும்ப, அதுகண்ட கௌதமர் ஒருபிடி தானியத்தை மணல்மேட்டில் விதைத்து, அநுட்டான முடித்து வந்து பார்க்க அவைமுளைத்துவளர்ந்துகதிரீன்று பழுத்துலர்ந் திருப்பதைக் கண்டு அவற்றை யறுத்துத் தானிய மாக்கிச் சமைத்துப் புசிக்க வளித்தார். அவர்கள் அதனால் காலங் கழித்தனர். இவ்வாறே பன்னிரு வருடமுங்கடந்து தேசம் க்ஷேமமடைய, முனிவர்களே! இனி யுங்கள் வாசத்திற்குச் செல்லலாமென அவர்கள் இவரையும் உடன்வர வேண்டுமென இவர்மறுக்க, முனிவர்கள் மாயப் பசுவொன்றுண்டுசெய்து அப்பயிரையழிக்க, கௌதமர்கண்டு கையிலிருந்த தருப்பைப்புல்லால் அதனை யோச்ச அது வீழ்ந்திறந்தது. அதனால் கௌதமர் கோஹத்திசெய்தனென்றும், சாந்திராயணாதி விரதாநுஷ்டானஞ்செய்யவேண்டுமென்றும் கூறிச்சென்றனர். முனிவர் தவஞ்செய்து கோதாவரியை வருவித்துப் புனிதமாயினர். இது உலகவழக்கத்தில் கௌதமர்பசுநியாயமெனவழங்கலாயது. [சைவபு]

கௌதமன்—(1) பாரத்துவாஜமுனி (2) கோதமரெனப்படுங்கௌதமர். இவர்மனைவி அகலிகையை வஞ்சனையாற் போகித்த இந்திரனைச்சபித்தவர். புத்திரர்சதாநந்தர். (3) சதாநந்தர் (4) கிருபன் பாட்டன் (5) கிருபன். (6) புத்தன் (7) சுஜாதன் (8) ஒரிருடி. இவர் தவாக்கினிக்குப் பயந்த இந்திரன் ஒரப்சரசினால் தவத்தை யழிக்கக்கருதி விடுப்ப, அவளைக்கண்டு காமம்பெருகி வீரியத்தைத் துரோணத்தில் விடுத்தவர். அதினின்றும் வில்லாசிரியராகிய துரோணருதித்தனர். [சைவபு] (9) பதிற்றுப்பத்துள் மூன்றாம்பத்துப்பாடிய புலவர். இவர் சேரபாடப் பட்டோன்தருமபுத்திரன். [புறநா]

கௌதமாச்சிரமம்—விசால புரத்திற்கும் மிதிலாபுரத்திற்குமிடையே ஜயந்தபுரத்திற் சருகிலுள்ளது.

கௌதமி—கோதாவரி-இது கௌதமரால் உண்டானமையின் இப்பெயரேற்றது. [சினி.

கௌத்தியடிகள்— ஒருஜைனசந்நியா

கௌமாரி — சத்தமாதருளொருத்தி. வாகனம் மயில், ஆயுதம் வேல்.

கௌமோதகி — திருமாலின் தண்டாயுதம்.

கௌரமுகன்—சமீகன்புத்திரன்.

கௌரவா—திருதராட்டிரன்மக்களானதுர்யோதனாதி நூற்றுவர்.

கௌரி— (1) கௌர [பொன்] நிறமுடையவர், உமாதேவி. (2) ஒருகாலத்தில் மதுரையில் கௌரியென்னும் பெயருடன் அவதரித்து ஒரு லவணனை மணந்த ஒரு பெண் - விருத்தகுமார பாலரான திருவிளையாடல். (3) வருணன் மனைவி.

கௌரிகங்கை—கைலாசகிரிக் கருகிலுள்ள ஒருநதி.

கௌரிகாந்த சார்வபௌம பட்டாசாரியர்— ஆநந்தலகரிக்கு வியாக்யானஞ்செய்தவரில் ஒருவர்.

கௌரீதிலகம்—கலசஸ்தாபன முதலியன செய்வதற்கு ஆகம விதியாற் செய்யப்பட்ட ஒரு மண்டபம் [சைவபு.]

கௌளர்— (1)கௌடர். வாமதந்திரப்படி சத்தியாராதனை செய்யுஞ் சமயிகள்.

## க்ஷ.

க்ஷணவித்வம்சி— ஒருவகை நாஸ்திகன் - உலகம் க்ஷணபங்க முற்றுச் சிருட்டி பெறுமியல்பினதென வாதிப்பவன்.

க்ஷத்திரதருமன்—புரூரவன் புத்திரனாகிய க்ஷத்திரவிருத்தன் மரபில் உதித்தவன்.

க்ஷத்திரவிருத்தன் — புரூரவனுடைய ஆயுவிநயபுத்திரன். நகுஷனுக்கிளைவல். [வர்.

க்ஷத்திரியர்—இரண்டாம் வருணத்த

க்ஷத்திரோபேக்ஷன் — அக்குரூரன் தம்பி.

க்ஷபணன்—(1)பௌத்தமுனிவன் (2) ஜைனமுனிவன் (3) விக்கிரமார்க்கன் அவைக் களத்திருந்த நவரத்தினமெனும் பட்டம்பெற்ற ஒன்பது புலவருளொருவர்.

க்ஷமை—(1) பூமிதேவி (2) துர்க்கை (3) தக்ஷப்பிரஜாபதியின மகள்.

க்ஷிதிதரம—ஸ்ரீசைலதிற்குரியநாமாந்தரம். கிருஷ்ணாநதியின உற்பத்திஸ்தானத்திற் கருகிலுள்ளது. மகாரண்ணியமெனும் வனம இதனைச்சூழ்ந்திருக்கும்.

க்ஷீராப்திமதனம்—திருப்பாற்கடலைக் கடைந்தது என்பதுபதப்பொருள். தேவாசுரர்கட்கு அடிக்கடி நிகழும் யுத்தத்தில் இருதிறத்த வரிலும் அநேகர் இறந்து படுதலின், அங்ஙனமின்றிப் பாறகடல் கடைந்து அமுதம்பருகி நரைதிரை மூப்பகன்று பன்னாள் போர்புரியக் கருதித்திருமாலிடம் தெரிவிக்க, அவர் மந்தரகிரியை மத்தாகநட்டு வாசுகியைத் தாம்பாகப்பூட்டி, சந்திரனையடைதுணாக்கி, தாமே கூர்மமாக அம்மலையைத் தாங்கி, தேவர் ஒருபுறமும் அசுரர் மறுபுறமுமாக வடத்தை யிறுக்கக் கடைந்தனர். வாசுகி இவ்வருத்தமாற்றாது விஷத்தைக் கக்க அது யாவரையும் அழிக்குமென்று கருதிக் கைலாயமலையை யடைந்து கண்ணுதலைக்

கறிவிக்க, அக்கருணாமூர்த்தி அதனை வாயிற்பெய்து கண்டத்தடக்கி நீலகண்டராகித் திருநாமங்கொண்டனர். மீண்டுங்கடைய, முகடி திருமகள் சந்திரன் தந்வந்திரி அப்சரசுகள் உச்சைச்சிரவம் ஐராவதம் பாரிஜாதம் கற்பதரு காமதேனு கவுஸ்துபம் அமிர்தம் இவைதோன்றின. திருமகள் கவுஸ்துபம் இவற்றைத் திருமாலேற்றனர். தந்வந்திரி தேவமருத்துவனாயினன். உச்சைச்சிரவம், ஐராவதம் அப்சரசுகள் கற்பகம் பாரிஜாதம் இவற்றை இந்திரனுக்குக் கொடுத்தனர். முகடியை வருணனுக் களித்தனர். எஞ்சிய சரிதையை இராகுவிற்காண்க.

க்ஷேத்திரபாலகர் — அட்டதிக்குப் பாலர்.

க்ஷேத்திரபாலகன்—(1) உருத்திரன் (2) வைரவன்.

க்ஷேமகன்—அபிமன்னுவின் மரபிற் கடைப்பட்டவன். இவனோடு டம்மரபுநின்றது. [ரன்.

க்ஷேமதன்வா — புண்டரீகன் புத்தி

க்ஷேமன்—சுநீதன்புத்திரன்.

க்ஷேமாவி—சிருஞ்சயன்புத்திரன்.

க்ஷேமியன்—உக்கிராயுதன்புத்திரன்.

## ச

சகடாசாரி — ஒருவடநூற் புலவன். இவனாற் செய்யப்பட்டது சாகடாயனம்.

சகடாசுரன்— கம்சன் றூதரிலொருவனாகியஇராக்கதன். கண்ணன்குழந்தையாயிருக்கையில் சகடரூபமெடுத்துச் சென்று கொல்ல விருந்து கண்ணனால் பொடிபடுத்தப் பட்டிறந்தவன்.

சகதேவன்—(1) குந்தி உபதேசஞ்செய்த அக்வினி தேவ மந்திரத்தால் மாத்திரா தேவியிடத் தோன்றியவன். பாண்டுபுத்திரரிற்கடைப்பட்டவன். சாஸ்திரஞ்ஞன். மனத்தூய்மையுடையோன். இவனே இருதிறத்தாருக்கும் பாரத யுத்தத்திற்கு நாள் வைத்தவன் (2) சராசந்தன் மகன். இவன்மகன் சோமகன் அல்லது சோமாபி (3) சூரிய வமிசத்துத் தூமிராக்ஷன்குமாரன். (4) சந்திரவமிசதது அரியவசுவனன் புத்திரன். இவன் புத்திரன் பீமன். (5) சுதர்சனன்மகன். இவன் மகன் சோமகன். (6) சிரஞ்சயன் மகன். இவன்மகன் குசாசுவன் (7) சேனுபதியாகிய பாநுவின் மகன்.

சகநந்தனன்—ஒருசாரணன். [சூளா].

சகந்தரை—ஒருதேசம்.

சகம்—சாகர் வசிக்குந் தேசம் - சிந்துதேசத்தின் மேற்கிலுள்ளது.

சகரன்—இக்ஷ்வாகுவமிசத்து ஷட்சக்கிரவர்த்திகளி லொருவன். இவன் பிதாவாகுகன். மனைவியர் கேசினி சுமதியென்போர். இவன் கர்ப்பத்திலிருக்கையில், தாய் நஞ்சூட்டப்பட்டமையால் உரியகாலத்திலேபிறவாது எழுவருஷங்கடந்து பிறந்தவன். இதுகாரண மாகச் சகரன் எனப்பெயர் பெற்றவன். [சரம்—நஞ்சு.]இந்திரபட்டத்தைவிரும்பித் தொண்ணூற்றொன்பது அசுவமேதஞ் செய்து முடித்து நூறுவது செய்யத் தொடங்கக்கண்ட இந்திரன் அசுவமேதப்புரவியைக் கவர்ந்து பாதலத்தில் தவஞ் செய்துகொண்டிருந்தகபிலராச்சிரமத்திற்கட்டிச்செல்ல, சகரபுத்திரர் அறுபதி

னாயிரவருங் குதிரையை நிலமெங்குந் தேடிக்காணாது புவியைத் தோண்டிச்சென்று பாதலம்புக்குப் புரவியைக்கண்டு அதனருகே தவத்திருந்த இவரே இதனைக்களவு செய்தனரென்று அவரைத் துன்புசெய்யத்தொடங்கி அம்முனிகோபாக்கினியால் வெந்து சாம்பராயினர். இதன் விஞ்சியசரிதையை அம்சுமானிலும்பகீரதனிலும் கண்டுகொள்க. சகரர்தோண்டியது சாகரம்.

**சகலகலாவல்லிமாலை**—பத்துக் கட்டளைக்கலித்துறையால் குமரகுருபர சுவாமிகளியற்றிய சரஸ்வதி தோத்திரமான நூல்.

**சகஸ்ரம**
**ஸஹஸ்ரம** } இருபத்தெட்டு சிவாகமங்களிலொன்று. இது சிவபிரான் கடிசதானமும், பத்து உபபேதங்களும், சதகங்கிரந்தமுமாகவுளது.

**சகஸ்வான்**—அமரிஷன் புத்திரன்.

**சகளேசமாதிராசையர்**— திருவம்பைத்தலத்தரசர். சிவநேயமில்லாரைப் பிணமென்றவமதித்துவிலகுபவர். மல்லிராசையரால் அநுக்கிரகிக்கப் பெற்றவர். வீரசைவர்.

**சகிதேவியம்மை** — திருச்சேய்ஞலூரில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

**சகுந்தலை**—விசுவாமித்திரருக்கு மேநகையெனும் அப்சரசினிடம் பிறந்தவள். துஷ்யந்தன் பாரியை. பரதன்தாய். மேநகை இவளைப்பெற்றவுடனே வனத்தில் விட்டகல, சகுந்தபக்ஷிகள் சிறகாலணைத்துக் காத்திருப்பக்கண்ட கண்ணுவமுனிவர் எடுத்துச் சென்று வளர்க்க வளர்ந்தவள். சகுந்த பக்ஷிகள் காத்தமையினை சகுந்தலையெனப்பெயராயது.

**சகுனி** — (1) அசுரன். இரணியாக்ஷன் புத்திரன். (2) யதுவம்சத்துத் தசரதன் புத்திரன். (3) காந்தாரநாட்டு மன்னனான சுபலன் புத்திரன். சாந்தாரிசகோதரன். துரியோதனனுக்கு அம்மான். துரியோதனனுக்காகப் பாண்டவருடன் சூதாடிவென்றவன். திருதராட்டிரன் காந்தாரியை மணமுடித்துத் தனதூரை யடைந்தவுடன், தனனொடு வழிவிடவந்த மைத்துனர் நூற்றுவரும் பலவான்களும் வில்லாளிகளுமா யிருப்பதுணர்ந்து இவர்களால் ஒருகாலத்தில் ஏதேனும் ஆபத்துண்டாமாதலின் இவர்களை முடிக்கவேண்டுமென்று கருதி, ஒருசிறிய கட்டிடமொன்று செய்வித்து அவர்கட்குக் காட்டுகிறதுபோல, அனைவரையும் உள்ளே புகவிட்டுத் தாளடைத்து விட்டு, உயரத்துள்ள ஒருசிறுவழியால் ஆளொருவர்க்காகத்தக்க உணவினையனுப்பக்கண்டு, அவர்கள் இவன் நம்மைக்கொல்லக் கருதினன். இவ்வுணவிற்காக நாம் சண்டை யிட்டு மடிதல் தகுதியன்று. நம்மில் தீரமுடைய ஒருவனே யிதனை யுண்டு பிழைத்திருந்து இவன்குலத்தையழிக்கவேண்டுமெனத் தீர்மானித்து, நீயிரு நீயிருஎன ஒவ்வொருவருங்கூறி என்னாலியலாது என்னாலியலாது எனத் தடுத்துவருகையில், கடைக்குட்டியான இவன் நானே அங்ஙனஞ்செய்வேனென்று அவ்வுணவை யுண்டுவந்தனன். சிலதினங்களில், மற்றையோரிறந்தொருவனேபிழைத்திருப்பதை யறிந்த திருதராட்டிரன் தாளைநீக்கி உள்ளேபுக, சகுனி

கண்டு மாமா! எனப்புலம்ப, வருந்தற்க எனத்தேற்றித் தன்பால் வைத்துக்கொள்ள, சகுனி அவர்களுக்கெல்லாம் அதிப்பிரியனாய் வளர்ந்து கௌரவர்க்கும் பாண்டவர்க்கும் போர் நிகழ்கையில் கௌரவர்க்கு அநுகூலஞ் செய்வான் போல அந்தரங்கத்தில் பல்வகை இடுக்கண் விளையத்தக்க சூழ்ச்சிகள் செய்துகொண்டிருந்தான். இறுதியில் வீமசேனன் துரியோதனனோடு மற்போர் புரிகையில் படைக்களத்தில் வீழ்ந்த சகுனி திருதராட்டிரன் மக்கள் தொண்ணூற்றொன்பதின்மரும் இறந்தார்கள். இனி துரியோதனனே உயிர்த்திருக்கின்றான். இவனுமிறக்கக்கண்டு எனது சபதத்தைமுடித்து உயிர்நீங்குவேனெனத் தலைதூக்கிப் பார்த்துக்கொண்டிருந்ததை வீமசேனன் கண்ணுற்றுணர்ந்து ஒருதை தலைமேற்கொடுக்க இறந்தவன்.

சகோத்திரன்—பகீரதன் புத்திரன்.

சக்கரசமோரதைத்தியன்—திரணாவர்த்தனுக்கு நாமாந்தரம்.

சக்கரதானமூர்த்தி—சிவமூர்த்தம் அறுபத்துநான்கனுளொன்று. திருமால் குபனெனும் அரசன் காரணமாகத் ததீசிமுனிவரையெதிர்த்துத் தமது சக்கரத்தை யவர்மேல் விடுப்ப, அஃதவர் வச்சிரயாக்கையிற்றாக்கி வாய்மழுங்க மனம்வருந்தி, சிவபிரானை நாளொன்றுக்கு ஆயிரந்தாமரைமலர்களா லர்ச்சித்து வருகையில், சிவபெருமான் அவரைச் சோதிக்கக் கமலமொன்றனை மறைப்ப, அர்ச்சனை செய்ததிருமால் மந்திரமொன்றுக்கு மலரின்றி மயங்கி, தமது விழியையே கமலமாகப் பாவித்துப் பிடுங்கி யர்ச்சிக்க, சிவபெருமான் சுதாசனமென்னுஞ் சக்கரத்தை யளித்து, அவ்விழியையும் பெறச்செய்து, கமலக்கண்ணனெனு நாமமுமளித்த அவசரம்.

சக்கரவாளக்கோட்டம்—புத்திரசோகத்தால் வருந்திய கோதமையின் துயரைப்போக்க, இவ்வுலகத்துள்ள எல்லாத்தேவர்களையும் சம்பாபதி வருவித்துக்காட்டியவிடத்து; அக்காக்ஷியை எக்காலத்தும் யாவருங் காணும்படி மயனால் நிருமிக்கப்பட்டதுபற்றி, இஃதிப்பெயரேற்றது. இது காவிரிப்பூம் பட்டினத்தின் புறத்தேயுள்ள மயானத்தின் அருகிலுள்ளது. இதனை மயானக்கோட்டமென்றுங் கூறுவர். சம்பாபதி கோயில் கந்திற்பாவை உலகஅறவி யென்னு மூன்றும் இதைச்சார்ந்துள்ளவை [மணி.]

சக்கரவாளம்—உலோகாலோகபர்வதம். இது சக்கராகாரமாய்ப் பூமியைச் சூழ்ந்திருத்தலின் இப்பெயர் பெற்றது.

சக்கிரி—(1) திருமால் (2) இந்திரன்.

சக்தி—(1) ருஷி. வசிட்டர் மூத்தபுத்திரன். பராசரன்பிதா. (2) உமாதேவி. (3) தெய்வவல்லபம், திருவருள்.

சக்துபிரஸ்தன்—ஒருவேதியன். குருக்ஷேத்திரத்திலிருந்தவன். இவன் அதிதிபூஜைசெய்த பலத்தால்தன குடும்பத்துடன் பிரமலோகஞ்சேர்ந்தவன்.

சக்ஷு—அநுபுத்திரன். யயாதி பௌத்திரன்.

சக்ஷுந்தி—கங்கையின் உபநதிகளிலொன்று.

**சக்ஷுர்மநு**—சுவாயம்பு மநுவமிசத்துச்சர்வதேசசுவின் புத்திரன். இவன்தாய் அகூதி. மனைவி நடுவலை. புத்திரர் புருவன் குற்சன் திருதன் துய்ம்மன் சத்தியவந்தன் இருதன் விரதன் அக்கினிஷ்டோமன் சிபி சுதய்ம்மன் அதிராத்திரன் உன்முகன் எனும் பன்னிருவர்.

**சங்ககர்ணன்**—(1) ஒருசிவகணன். இவனுக்குந் திருமாலுக்குங் கைலைமலைச்சாரலில் போர்நிகழ்ந்த பொழுது அவருடைய கேசத்தையறுத்தவன். [ஸ்காந்தபு] (2) ஒருபூதன. ரேபல்லேயில் கிருஷ்ணனாதியோரைக்கொல்லக்கம்சனேவலால் காலகவியெனுமசுரன் விஷவிளா விருக்ஷமாய் நின்றதை, ஒருபிராமணன் மூலமாக ஆவேசித்துக் கண்ண பலராமர்கட்குணர்த்தியவன.

**சங்கசூடன்**—குபோனதூதன். பிருந்தாவனத்திலிருந்த கோபிகைகளை வடதிசைக்குக் கொண்டு போகையில் கண்ணனாற் கொல்லப்பட்டவன். [பாகவத]

**சங்கடன்**—தருமனுக்குக் ககுபுதேவி பாலுதித்தவன்.

**சங்கணன்**—வச்சிரநாபன் புத்திரன்.

**சங்கதருமன்**—சுதமதிக்கும் அவள் தந்தைக்குந் தருமோபதேசஞ்செய்த ஒருபௌத்தமுனிவன் [மணி]

**சங்கநிதி**—சங்க வடிவமா யுள்ள ஒரு நிதி. எடுக்குந் தோறுங் குறைவுபடாதது.

**சங்கபாலன்**—(1) லோகபாலருளொருவன். (2) காசிபர்க்குங் கத்துருவைக்கும் பிறந்தநாகர்களிலொருவன். நிருதிதிசையிற் புவியைத் தாங்குவோன்.

**சங்கமங்கை**—அறுபான்மும்மை நாயன்மாருளொருவராகிய சாக்கியநாயனார் முத்தியடைந்த தலம். தொண்டை நாட்டுளது.

**சங்கமன்**—ஒருவணிகன். நீலிகணவன் முற்பிறப்பில் காரணமின்றி அவளைக்கொல்வித்தபாவத்தினாலேயே கோவலன்கொலையுண்டிறந்தான்.

**சங்கமுகத்துறை**—காவிரி கடலொடு கலக்குந்துறை.

**சங்கம்**—சங்கமென்பதற்குக் கூட்டமென்பது பொருள். ஈண்டுத்தமிழறிந்தபுலமையோர் தொகுதி. முதலில் ஆரியநாட்டினின்றுந்தெனனாடைந்த அகத்தியமுனிவர் காய்சினவழுதி காலத்தில் தலைச்சங்கம் கண்டவர். இவ்வகையாற்றலுடையார் அச்சங்கத்தி லிருத்தற்குரியாரென்றும், நவீனமாகவொருநூல் செய்தோர் அங்குச்சென்று அரங்கேற்றல்வேண்டுமென்றும், அங்கீகரிக்கப்படின் அரசனாற் பரிசுகொடுக்கப்படுமென்றும் நாடெங்கும் ஆணைபோக்குவித்துத் தன் சங்கேதம்முடித்துவைக்க. அச்சங்கத்தின் வழியாகத்தமிழும்வைதிகசமயமும் நாகரிகமும் வளர்ந்தோங்கின. அகஸ்தியருடைய இலக்கணம் பரவிய இடமேசெந்தமிழ்நாடு. ஏனையவை கொடுந்தமிழ் நாடுகளாம். அவை "தென்பாண்டி குட்டங்குடங்கற்காவேண்பூழி,பன்றியருவாவதன் வடக்கு—நன்றாய, சீதமலாடு புனனாடு செந்தமிழ் சேர்,ஏதமில் பன்னிருநாட்டெண்." என்னும்வெண்பாவானறிக. அகத்தியர் தாபித்ததன்பின் இருசங்கமிருந்தமையின் அது தலைச் சங்கமெனப்பட்டது.

"தலைச்சங்கமிருந்தார் அகத்தியனாருந் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளுங் குன்றமெறிந்தமுருகவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனுமென இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மர். அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்பது. அவர்களாற் பாடப் பட்டன எத்துணையோ பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகுங்களரியாவிரையுமென இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்துநானூற்று நாற்பதிற்றியாண்டு சங்க மிருந்தா ரென்பது. அவர்களைச் சங்கமிரீஇயினார் காய்சினவழுதிமுதலாகக் கடுங்கோனீறாக எண்பத்தொன்பதின்மரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை யென்ப. அவர்க்குநூல் அகத்தியமென்ப.

"இனி, இடைச்சங்க மிருந்தார் அகத்தியனாருந் தொல்காப்பியனாரும் இருந்தையூர்க் கருங்கோழியுமோசியும் வெள்ளூர்க்காப்பியனுஞ் சிறுபாண்டரங்கனுந் திரையன்மாறனுந் துவரைக்கோமானுங் கீரந்தையாருமென் இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்டு மூவாயிரத் தெழுநூற்றுவர் பாடினாரென்ப. அவர்களாற் பாடப் பட்டன கலியுங் குருகும் வெண்டாளியும் வியாழமாலை யகவலுமென இத்தொடக்கத்தன வென்ப. அவர்க்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமும் மாபுராணமும் இசை நுணுக்கமும் பூதபுராணமுமெனவிவை. அவர் மூவாயிரத்தெழுநூற் றியாண்டு சங்கமிருந்தாரென்ப. அவரைச் சங்க மிரீஇயினார் வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறனீறாக ஐம்பத்தொன்பதின்மரென்ப. அவருட் கவியரங்கேறினார் ஐவர் பாண்டியரென்ப, அவர் சங்கமிருந்துதமிழாராய்ந்தது கபாடபுரத் தென்பது. அக்காலத்துப்போலும் பாண்டி நாட்டைக் கடல்கொண்டது.

"இனிக் கடைச்சங்க மிருந்து தமிழாராய்ந்தார்சிறுமேதாவியாருஞ் சேந்தம்பூதனாரும் அறிவுடையரனாரும் பெருங்குன்றூர்க்கிழாரும் இளந்திருமாறனும் மதுரை யாசிரியர் நல்லந்துவனாரும் மருதனிளநாகனாரும் கணக்காயனார் மகனார் நக்கீரனாருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்ப. அவர்களாற் பாடப்பட்டனநெடுந்தொகை நானூறுங் குறுந்தொகைநானூறும் ஐங்குறுநூறும் பதிற்றுப் பத்தும் நூற்றைம்பதுகலியும் எழுபது பரிபாடலுங் கூத்தும் வரியும்பேரிசையுஞ் சிற்றிசையுமென்று இத்தொடக்கத்தன. அவர்க்குநூல் அகத்தியமுந் தொல்காப்பியமு மென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்தெண்ணூற்றைம்பதிற்றியாண்டென்ப. அவர்களைச் சங்கமிரீஇயினார் கடல் கொள்ளப் பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதியீறாக நாற்பத் தொன்பதின்மரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை யென்ப.

அவருட் கவியரங்கேறினூர் மூவர் பாண்டியரென்ப."

இவ்வாறு நிகழ்ந்த கடைச்சங்கம் உக்கிரப்பெருவழுதியிறந்தபின்னர் நிலைதளர்ந்தது. அச்சங்கத்திற்பிராமணுதி சதுர்வருணத்தவரும் சைவர் வைணவர் சமணர் முதலியபல சமயிகளும் விளங்கின ரென்பது அவர்கள் செய்தநூலாலறியத்தகும். கடைச்சங்க மழிந்த பின்னரும் பாண்டியர்கள் தமிழாய்வாரைப் பரிபாலித்துப் பாஷையைஅபிவிர்த்தி செய்து வந்தார்கள். ஆருகத மதப் புலவர்கள் விருத்தியாகிஅவர்களும் தஞ்சமயநூலும் பொதுநூலு மாகப்பலநூல் செய்தனர். அவர்க்கு முன்னுகச் சைவ வைணவ வித்துவான்கள் தமக்குவேண்டிய புராண இதிகாச சமய நூல்களை மொழிபெயர்த்தனர்.

சங்கத்தினைப்பற்றிய பிறவிடயங்களைத் தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கமென்னும் இடங்களிற் கண்டுகொள்க.

சங்கரகவி—போஜராஜ சமஸ்தானத்திலிருந்த கவிகளிலொருவர். ஒரு சமயத்திலே அரசனிடஞ் சொல்லிய அற்புத ஸ்லோகத்திற் காகப் பதினெரிலக்ஷம் பொன் பரிசில் கொடுக்கப்பெற்றவர்.

சங்கரதாசையர்—சங்கமபுரியில் வாழ்ந்திருந்த திரிநேத்திரங்களையுடைய ஒருவீரசைவர். அடியவர்க ளணிந்திருந்த கந்தைகளைப்பொத்திக்கொடுப்பவர். கர்வித்த வைணவ ரொருவர் பூசித்துவந்த நரசிங்கத்தை நெற்றிக்கண்ணால் நீருக்கியவர்.

சங்கரநமச்சிவாயப்புலவர்—திருநெல்வேலியிலிருந்த ஒருசைவப்புலவர். இவர் நன்னூலுக்கு விருத்தியுரை செய்தவர். இவரியற்றியவுரை திருவாவடுதுறை யாதீனத்துத் திராவிடமா பாஷியகர்த்தராகியசிவஞான யோகிகளாற்றிருத்தப்பட்டது. இதுவே நன்னூலுக்குரியபலவுரைகளினுஞ்சிறந்தது.

சங்கரன்—(1) சிவன் (2) ஏகாதசருத்திரரிலொருவன்.

சங்கராசாரியர்—சங்கரருடைய அவதாரமெனச்சொல்லப்படுபவர். இப்பெயரால் மூவரிருந்ததாகத் தெரியவருகிற தெனினும் ஆதிசங்கராசாரிய ரொருவரே அப்பெயரின ரென்றும், ஏனைய இருவர் அப்பெயரால் விளங்கினவரென்றும் உணரவேண்டும்.

ஆதிசங்கரர் — சிதம்பரத்திலே விசுவசித்தெனும் வேதியருக்கும் அவர் மனைவி அம்பிகைக்கும் புத்திரரா யவதரித்தவரென அவர்பிரதமசிஷராகிய ஆநந்தகிரி யென்பவர் தாமெழுதிய சங்கரவிஜய நூலிலே குறித்திருக்கின்றனர். இவர்காலம் இற்றைக்கு 2165 வருடங்கட்கு முன்னெனச் சிலபிரமாணங்களால் விளங்குகின்றது. இவர்பாலசந்நியாசமேற்கொண்டு வடதிசை சென்று பதஞ்சலி யெனுஞ் சற் குருவை யடைந்து வேத சாஸ்திரங்களில் வல்லுநராய், பிரமசூத்திரம் உபநிஷதங்கள் முதலியவற்றிற்குப் பாஷியமெழுதிக்கேவலாத்துவிதமதத்தைப் பலவிடங்களிலும் பரவச்செய்துஜகத்குருவெனும் பட்டம்வகித்தவர். இவர் துவாரகை சிருங்ககிரி காஞ்சிபுரம் கும்பகோணம் முதலிய

பல விடங்களில் பல்கால் வசித்துக் கேவலாத்துவிதமதஸ்தபானஞ்செய்தமையின் ஆங்காங்கு அவர்க்கு மடங்கள் ஸ்தாபிக்கப்பட்டன. இவர் முப்பத்திரண்டு வயதிலே காஞ்சிபுரத்தில் பரிபூரணமுற்றவர். சாமர்த்தியமும் வாக்குவல்லபமும் தீர்க்கவிசாரணையும் பெருந்தலைகமையுமுடையரென அவர் நூல்கள் விளக்குகின்றன. இச் சங்கரா சாரியரே பிரமசூத்திர பாஷியம் ஆநந்தலகரி சௌந்தரியலகரி சிவபுஜங்க முதலியன இயற்றினர். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளைச் சௌந்தரியலகரியிலும், கண்ணப்ப நாயனாரைச் சிவானந்த லகரியிலும், இயற்பகைநாயனார்சிறுத்தொண்டநாயனார் சண்டேசுர நாயனார் இவர்களைச் சிவபுஜங்கத்திலும் தோத்திரஞ்செய்திருக் கின்றனர். இதனால் இவர் அவர்கள் காலத்திற்குப் பிந்தியவரெனத் தெரியவருகிறது. ஆநந்தலகரிக்கு இயற்றிய இருபத்து நால்வர் வியாக்கியானத்தில் அப்பையதீக்ஷிதர் வியாக்கியானஞ் சிறந்தது என்பர். சிருங்ககிரிமடத்தில் சங்கராசாரியருக்குப்பின், சாரதா பீடத்திலே பிரம் சுவரூபாசாரியர் முதல் இப்போதுள்ள ஸ்ரீராஜ ராஜேசுவர சங்கராச்சிரம சுவாமிகள் வரையில் பட்டம் பெற்றவர்கள் எழுபத்துமூவர். மேற்கூறிய பதஞ்சலியென்றது கோவிந்தயோகியின பூர்வாச் சிரமநாமம். [பதஞ்சலிமுனிவரென்றெயுதற்க.]

இரண்டாஞ் சங்கராசாரியர்—சாலிசகம் நானூற்றிருபத் தொன்றில் கேரளதேசத்திலே சிவகுரு வென்பாருக்குப் புதல்வரா யவதரித்தவர். இவரும் பல தேசங்கட்குச் சென்று தம்மதஸ்தாபனஞ் செய்து வந்தவர். கொங்கு தேசத்தின் வடக்கே மேற்கடற் கரையிலுள்ள [illegible] மலமென்னு மூரிலேபரிபூரணமுற்றவர். சங்க்ஷேபசாரீரகமுதலியநூல்களை யியற்றியவர். இவர் சமாதியுள்ளவிடத்தில் கார்த்திகை மாசசுக்கிலபக்ஷ திரயோதசிகளில் பெரிய தொரு விழா நடக்கின்றது.

மூன்றாஞ் சங்கராசாரியர்—சாலிசகம் எழுநூற்றுப்பத்திலே பிறந்து ஐம்பத்தாறும் வயதிலே பரிபூரணமடைந்தவர். இவரும்வித்தியாவிடயத்தில் சமர்த்தராகவே யிருந்தவர். சதானந்த சுவாமிகளால் இவரது திக்குவிஜய மென்னும் வரலாறு எழுதப்பட்டது. பிந்திய சங்கராசாரியர் சரிதை யெழுதினோர் ஆதி சங்கரருடைய மகிமைகளிற் சிலவற்றை இவர்களுடையதாக எழுதிப் பெருமைப்படுத்தினர்.

சங்கருஷணன்—பலராமனுக்கு நாமாந்தரம். தேவகியின் கருப்பத்திலிருக்கையில், யோகமாயாதேவி சங்கர்ஷித்துச்சென்று ரோகிணி கருப்பத்திற் சேர்த்தமையின் இப்பெயர் பெற்றவன்.

சங்கவருணர்—பாண்டியராசாக்களால் நாகரிகரெனும் பட்டம் வகித்தோரில் ஒருவர். தந்துமாறனைப் பாடிய புலவர். இவர்பாடிய புறநானூற்றிலுள்ள பாடல் யாக்கை நிலையாமை முதலியவற்றை நன் குணர்த்தும். இவர்க்கு நாகரியரென்றும் பெயர்

சங்கவெண்மலை—சுதஞ்சனன்மலை.

சங்கற்பசூரியோதயம்—விசிஷ்டாத்து

விந மதத்திற்குரிய தத்துவங்களை உருவகப்படுத்தி நாடகமாகக்காஞ்சி நகரவைணவராகியவேதாந்ததேசிக ராற் செய்யப்பட்ட தொருநூல். பிரபோதசந்திரோதயத்திற்குக்கண்டனமாகவியற்றப்பட்டது.

சங்கற்பநிராகரணம்—சித்தாந்தசாத்திரம் பதினான்கனுளொன்று. இருபது திருவாசிரியங்களையுடையது. அகச்சமயபேதமும் சித்தாந்தஉண்மையும்விளங்க உமாபதி சிவாசாரியர் அருளிச்செய்தது.

சங்கற்பன்—(1) பிரமமானசபுத்திரரி லொருவன் (2) தருமனுக்குஞ் சங்கற்பைக்கும் பிறந்தபுத்திரன்.

சங்கற்பை—தருமன் மனைவி. இவள் மகன் சங்கற்பன்.

சங்கன்—(1) அஷ்டமகா நாகங்களி லொன்று (2) சுக்கிரீவன் சேனுவீர ரிலொருவானரன (3) விராடன்புத்திரன். உத்தரை தமையன். (4) கம்சனுக்கிளவல்.

சங்காரித்தம்—சப்த மேகங்களி லொன்று. இது மலர்மாரி சொரிவது.

சங்கிராந்தவாதி—ஒருவகைச்சைவன். அவிகாரமான ஆன்மசந்நிதியில்அசத்தாகிய கருவிகளே சத்தாகிய சிவத்தை,சிவகரணமாய் நின்றறியுமென்பவன். அகச்சமயிகளிலொருவன்

சங்கிருதம்—(1) சம்ஸ்கிருத பாஷைக்கினமான சௌரசேனி முதலிய பிராகிருத பாஷைகளிலொன்று (2) சம்ஸ்கிருதம்.

சங்கிருதி—மூன்றாம் நரன்புத்திரன் இவன்புத்திரர் ரந்திதேவன்-குரன்

சங்கு—விக்கிரமார்க்கன் அவைக்களத் திருந்த நவரத்தினமெனும் ஒன்பது பண்டிதருளொருவன்.

சங்குசிரசு- தநுபுத்திரரிலொருவன்.

சசாங்கன் — (1) சந்திரன். [சசம்] முயற்குறியுடையான். (2) புத்த சினனமாகக கயையிலிருந்தபோதி விருக்ஷத்தை வெட்டுவித்தவன்.

சசி—(1) இந்திராணியின் நாமாந்தரம். இந்திரனபாரி புலோமன் மகள. இதுகாரணமாகப் புலோமசையெனுந் தந்திராந்த நாமமும் வழங்கும். சப்தருஷிகள் சிவிகைதாங்க இந்திரபட்டதிற்கு வருவோருக்கெல்லாம்மனைவியாகவின நித்தியகன்னிகையென்பா. (2)பிரசாபதியின இளையமனைவி [சூளா]

சசிபிந்து— யதுவமிசத்துச் சித்திரரதன் புத்திரன்.எண்ணிறந்தமனைவியரும் மக்களுமுடையோன்.

சச்சநதன--ஏமாஙகதநாட்டரசன.சீவகன்பிதா. இவன்மனைவி சீவகனைக் கருவுற்றிருககையில், கட்டியஙகாரனென்னும மந்திரி இவனைக்கொன்று நாட்டினைக்கைப்பற்ற,இவன் மனைவி மயிற் பொறியூர்ந்து வனத்திறசென்று சீவகனைப் பெறறனள இராசமாபுரம் இவனிராசதானி.

சஞ்சயன்—(1) பாரதயுதத நிகழ்கையில், போர்க்களத்து நிகழ்வனவற்றை அவ்வவ்வகையே திருதராட்டிரனுக குரைத்துவந்தவன். திருதராட்டிரன் அவ்யுத்தத்தைக் காண விரும்பிக் கணணொளியை வியாசருனாற்பெறறுக் கண்டபொழுது மனந்தாளாது மீண்டுங்கண்வேண்டாமென்றவிலக்கி, இவனைக்கொண்டே முன்போலத் தெரிந்துகொள்ள விரும்புகையில், வியாசருளால் எத்துணைத் தூரத்துநிகழுஞ் செய்தியையு முணரத்தக்க ஞான

மருளப் பெற்றவன். பகவத்கீதையைக் கேட்டு வெளியிட்டவனுமிவனே. (2) செங்குட்டுவன் தூதரில் தலைவன் [சிலப] (3. க்ஷத்திரவிருத்தன் பௌத்திரன

சஞ்சை — இவளுக்குச் சஞ்ஞிகையெனறும் பெயர். துவஷ்டாவின் புத்திரி. சூரியன்மனைவி. அவனது தேககாந்தியைச் சகிக்கலாற்றாது பயந்து, தன்னிழலைத் தன்வடிவாகச்செய்து அங்குவிடுத்து உத்தரகுருவில் தவஞ்செய்திருந்தவள். அதனை யுணர்ந்த சூரியன அங்குச் செல்ல இவள் பெணகுதிரை வடிவேற்றோட, சூரியனும் ஆண்குதிரைவடிவாய்ப்பின்றொடர, இருநாசிவழியே வீரியமொழுக, அசுவினிதேவரெனனுந தேவமருததவரிருவர் தோன்றினர். இதனை "சஞ்ஞையாம் பகற்கடவுண மனைவியவன் கனலுடலந் தழுவலாற்றா, தஞ்சுவாடன்னிழலைத தனதுருவா நிறுவி வன மடைநது நோற்க, விஞ்ஞையா லறிந்திரவி பினறொடர மாப்பரியா மின்னைத் தானும், செஞ்செவே வயப்பரியாய் மையல்பொரு திந்தியதனைச் சிந்தினனே" என்பதனானுணர்க.

சடி — இரதநூபுரத் தரசன. அருக்ககீர்த்திக்குஞ்சுயம்பிரபைக்குமபிதா

சடையநாயனார் — சுந்தரமூர்த்தி சுவாமிகள் பிதா. ஆதிசைவர் - திருநாவலூரி லிருந்தவர். மனைவியார் இசைஞானியார்.

சடையப்பகாதர் — திருப்பனந்தாளில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

சடையப்பமுதலியார் — கம்பர் இளமைப் பருவத்திலே நன்றாய்க் குற்றேவல்செய்து வந்தபிரபு. இவரே கம்பரைச் சனமானித்தவர். இவர் திருவெண்ணெய் நல்லூரிலிருந்தவர். இவர்காலம் சாலிவாகன சகாப்தம் எண்ணூற்றேழு என்பது இராமாயணம் அரங்கேற்றச்செய்யுளால விளங்கும். இவர் கம்பரைக் காத்துக் கனம்பெறச் செய்தமையைக் கருதி இராமாயணத்தில் ஆங்காங்குப் புகழ்ச்சியாக எடுத்தோதப் பெற்றவர்.

சட்டநாதவள்ளலார் — சதாசிவரூபமெனு நூலியற்றியவர்.

சண்டகௌசிகர் — கௌதம வமிசத்து முனிவரிலொருவர். இவர் அநுக்கிரகித்த ஒருமாங்கனியால் மகதநாட்டரசனான பிருகத்திரன் ஜராசந்தனைப் புதல்வனாகப் பெற்றனன்.

சண்டமார்க்கன் — சுக்கிராசாரி புத்திரன். தைத்தியர்கட்குக்குரு.

சண்டமுண்டர் — இராக்கதர். சும்பநிசும்பர்கட்கு நண்பர்.

சண்டவேகை — மாயாவிஞ்சைத்தெய்வம் [சூளா]

சண்டாசுரன் — மிண்டாசுரன் சகோதரன். உமாதேவியைக் கண்டுமோகித்து அவர் கட்டளைபெற்ற சண்டிகையாற் கொல்லப்பட்டவன்.

சண்டிகை — மயானவாசினி யாகிய ஒருதேவதை.

சண்டிகைபீடம் — சத்திபீடங்கள் அறுபத்துநான்கனுளொன்று. இது அமரேசத்திலுள்ளது.

சண்டேசுவர நாயனார் — அறுபான்மும்மை நாயன்மாரு ளொருவர். திருசேய்ஞலூரிலே வேதியர்குலத்

தில் எச்சதத்தன் புத்திரராக அவதரித்து வேதவித்தாகி, பசுமேய்ப்போன் அவற்றினைத் துன்புறுத்துவது கண்டு மனஞ்சகியாது அத்தொழிலையே மேற்கொண்டு, அவ்வூரினருகே மேய்த்துவந்து, ஆங்குள்ள மண்ணியாற்றங்கரையிலே மணலைச் சிவலிங்கமாகக் குவித்துப் பாலைக்கறந்து அபிஷேகித்துச் சிவப்பிரீதி செய்து வருவதைக் கேள்வியுற்ற ஊரார் அவர் தந்தைக் குணர்த்த அவர்பிதா ஓர் மரத்தில் மறைந்துகொண்டு நின்று, அங்ஙன நிகழ்வுழி, அப் பாற்குடத்தைக் காலாலிடற, நாயனார் கண்டு தந்தையென்றும் வேதியனென்றுங் கருதாது அருகிலுற்ற கோலொன்றினை யெடுத்து மழுவாகக் கண்டு அவன்காலை வெட்டியெறிந்து சண்டேசுரபதவி யடைந்தனர். விசாரசருமரென்பது இவரதுபிள்ளைமைத் திருநாமம். இவர் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குந்திருநாவுக்கரசு சுவாமிகளுக்கும் முற்பட்டவர். இவரை அவ்விருபெருங்குரவருந் தேவாரத்தில் அமைத்துத்துதித்துளர்.

சண்டேசுவர பிரசாதமூர்த்தி—அறுபத்துநான்குசிவமூர்த்தங்களிலொன்று. சரிதை சண்டேசுவரநாயனாரிற்காண்க.

சண்பகமாலை—விசயை தோழியாகிய கூனி [சிங்க]

சண்பகாரண்யேசர்—திருநாகேச்சரத்தில் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

சண்பை—சீகாழியின் பன்னிரு திருநாமங்களிலொன்று. துருவாசமுனிதன் சாபப்படி சண்பைக் கதிர்களால் கோபாலகுமாரர்கள் மடியச்செய்தபாவம் நீங்கப்பூசித்த ஸ்தலமாகலின் இப்பெயரேற்றது.

சசகும்பம்—ஒருமலை. இதில் பொன் விளையும்.

சதகோடி—இந்திரன் வச்சிராயுதம். இது நூறு கூர்முனை கொண்டது எனப்பொருள்படும்.

சதக்கிருது — இந்திரன். [நூறுயாகஞ்செய்தவன்.]

சதசித்து— (1) பசமானன் மகன். இவனுக்கு விஷுவசோதி முதலாக நூறுபுத்திர ரிருந்தனர். (2) சகஸ்ரஜித்துமகன். மகாஹயன வேணுஹயன் ஹேஹயன் இவர்கள் பிதா.

சதசிருங்கம்—ஒருமலை. சநற்குமாரர் தவஞ்செய்துகொண்டிருக்கையில சிவபெருமான காக்ஷிதந்தும் அவர் யோகநிலையேயிருந்தது கண்ட திருநந்திதேவர் சினந்து ஒட்டையாகுகவெனச்சபித்தவிடம் துர்வாசர் செய்த மந்திரோபதேச பலத்தால் பாண்டவர் பிறந்ததுமிவ்விடமே.

சதசுவன்—சமான் மகன.

சதசேனன்—கண்ணன்மரபில் உக்கிரசேனன் பிதா.

சததனு—ஓரரசன - சைப்பியையின் கணவன் - சைப்பியையிற்காண்க

சததன்வன்—யதுமரபினனான ஹிருதிகன் புத்திரன். தேவமீடனுக்கிளவல். இவன சத்தியபாமையை மணக்கக்கருதி, சத்திராசித்துவை ந்தநித்திரையிற் கொன்றவன். இக்காரணத்தாற் கண்ணனாற் கொல்லப்பட்டவன். [பாகவத]

சததிருதி—(1) பிரமன (2) சமுத்தி

ரன் புத்திரி -பிராசீனபர்கிமனைவி. பிராசேதசுலைவயீன்றவள்.

சதத்ரு—ஒருநதி. இமாசலத்தின் வடக்கி லுதித்துச் சிந்துநதியிற் கலப்பது.

சதத்துவஜன்—ஊர்வஜன் புத்திரன்

சதபருவை—சுக்கிரன் மனைவி.

சதமகன்—(1) இந்திரன் - நூறுயாகஞ்செய்தவன், (2) ஒருதைத்தியன்- (3) வருடத்திற்கொரு யாகமாக நூறுயாகங்களைச்செய்து சிவபெருமானால் ஆயிரகரங்களை யடைந்தவன் [சைவபு]

சதமுகன்—சூரபன்மன் பக்கலிலிருந்த ஒரசுரன். வீரவாகுதேவராற் கொல்லப்பட்டவன்.

சதயாபன் — ஓரிராஜருஷி. இவன் கேகயவமிசத்தவன்

சதரூபை—பிரமனால்முதலிற் படைக்கப்பட்ட பெண். சுவாயம்பு மநுவின் மனைவி.

சதவலி—சுக்கிரீவன் சேனாநாயகரில் ஒரு வானரவீரன். இவன் சீதையைத்தேடிவடக்கேசென்றதூதன்.

சதவிந்து—ஒருநிமித்திகன் - சடியரசனுக்குப் புரோகிதன [சூளா]

சதாகாநந்தை } இவ்விரண்டும் நதி
சதாநீரை } யின பெயர்கள் - இவைபாரிபர்வதத்தி லுற்பத்தியாகி வருவன.

சதாக்ஷி—துர்க்காதேவி.

சதாசிவரூபம்—சட்டநாத வள்ளலாரியற்றியது. இது சிவலிங்கப் பிரபாவத்தினை ஒருவகையாக விரித்துக் கூறுநூல்.

சதாசிவமூர்த்தி—சாந்தராயும் சர்வகர்த்தாவாயும் அவ்யயராயும் சர்வஞ்ஞராயும் ஸ்வபாவப் பிரகாசராயும் அசலராயும் அநாதியராயும் அதலராயும் சூக்ஷமராயும் மஹாநாகியும் சித்கன ராகியும் வியாபியாகியும் முதசப் பிரியராகியும் அமலராகியும் பராசத்தியுடன் கூடியுமுள்ளவர் ஈசாநம்-தற்புருஷம்-வாமம்-அகோரம்- ஸத்தியோஜாதம் முதலாகிய ஐந்து திருமுகங்களுடனியைந்து எழுந்தருளி ஆன்மாக்களின் பாசச்சேத நிமித்தம சித்தாந்தமாகிய காருடம் - வாமம - பூதந்த்ரம் - பைரவ மீறாகிய ஆகமபேதங்களை ஈசாநமொழிந்தநான்குதிருமுகத்திலும, காமிகம - யோகசம்-சிந்தியம் - காரணம் - அசிதம் - தீப்தம் - சூக்ஷமம் - ஸஹஸ்ரம் - அம்சுமான் - சுப்ரபேதம் - விஜயம் - நிஸ்வாஸம் - ஸ்வயம்பூதம் - ஆக்நேயம் - வீரம் - ரௌரவம் - மகுடம் - விமலம் - சந்தாஞானம் - முகபிம்பம் - ப்ரோதகீதம் - லளிதம் - சித்தம் - சந்தாநம்-சர்வோத்தமம் - பாரமேச்சுரம் - கிரணம் - வாதுள மென்னும் இருபத்தெட்டாகமங்களை ஈசாந முகத்திலும் அருளிச் செய்தவர்.

இவ்வாகமங்களுள் முதலிற்கூறியபத்தும்சிவபேதங்களாம் ஏனைய பதினெட்டும் உருத்திர பேதங்களாம்.இச்சிவாகமங்களிருபத்தெட்டும்வக்த்ராரம் முதல் விஸ்வாத்மகம் ஈறுயுள்ள இருநூற் றெட்டு உட்பிரிவுடையன. அவற்றைக்காமிகத் தந்திராவதாரப் படலத்துட் காண்க. இவர் ஸ்படிகநிறம் - சடைமுடி ஐந்து திருமுகம் - பத்துக்கரங்கள்- ஒருதேகம் - இரண்டு திருவடிகள் - வலக்கரத்து இச்சா ஞாநக் கிரியை.

யென்னும் மூவிலைச் சூலமும், பராசத்தி ரூபமாய மழுவும், கர்த்துருபாவமான கட்வங்கமும், வாளும், பீஜாபூரகமும், வச்ரமும், ஜநநபயத்தைப் போக்குவதான அபயமும், இடக்கரத்து ரிசதிகுணமாகிய நாகமும், அலகுக்கும பூதங்களை நடத்தும் மாயா ரூப மாகிய பாசமும், குணமாகிய நீலோற்பலமும், அங்குசமும், சுத்தாசுதத அததுவாவைப் பிரவர்த்திக்குங் குணமான தமருகமும், போகத்தைததரும வரதமும், நாதகுணமாகிய மணியும், சங்காரகுணமாகிய அக்கினியும், திரோதாயியென்னும் பரிவட்டமும், அருளாகிய சுகநதமும, பரையாகிய மாலையும, அநுக்கிரகாங்குரமானசிறுநகையும் பொருந்தித் தியானபூஜா நிமித்தம் சகளத் திருவுருக்கொண்டெழுந்தருளி யிருபபினும, இவையிற்றிற்கு அபபாறபட்டுமிருப்பர்.

சதாநந்தசுவாமிகள்— மூனறுஞ் சங்கராசாரியார் திக்விஜயத்தை யெழுதியவர்.

சதாசிதன்—(1) பிரமன் (2) ஒரிருடி. கௌதமர்புததிரர். இவர்தாய் அகலிகை. ஜநகராஜன்குரு.

சதாநீகன்—(1) விராடராஜன் தம்பி. (2) நகுலனுக்குத் துரௌபதியிடம் பிறந்தவன் (3) ஜனமேஜயன்.

சதாமதுராம்பிகை—திருத்தரும புரத்திலே உமாதேவியாருக்கு வழங்குந் [திருநாமம்.

சதாயு—சிரரயு.

சதுக்கப்பூதம்— பொங் வேட்த்தினர் முதலி யோரைத் தன்பாசங் கட்டியுரா, அவரை யறைந்துண்ப தோர் பூதம். இதனை, “தவமறைந் தொழுகுந் தன்மையிலாளர், அவமறைந் தொழுகு மலவைப் பெண்டிர், அறைபோ கமைச்சர் பிறர்மனை நயப்போர், பொய்க்கரி யாளர் புறங்கூற்றாளரென், கைக்கொளபா சத்துக் கைப்படு வோரெனக், காத நான்கினுங் கடுங்குர லெழுப்பிப், பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்” என்பதனுணறிக. [சிலப்]

சதுரங்கன்—உரோம பாதன் புத்தி [ரன்.

சதேந்திரர்—நூறு இந்திரர்கள. அவர் கல்பவணேந்திராநாற்பததிருவரும் வியநதரேந்திரா முப்பத் திருவரும் கற்பேந்திரர் இருபத் திருவரும், சந்திரனும் சூரியனும் நரேந்திரனும் மிருகேந்திரனும் எனப் படுவோர். இவர்கட்கெல்லாந் தலைவன் அகமிந்திரன். இது ஜைனநூல்வழக்கு

சதோகநாதர்—நவசித்தருளொருவர்.

சத்ததந்து—ஓரசுரன். தக்கனைப்போல்ஓர்யாகஞ்செய்து கொல்லப்பட்டவன. இவன வரலாற்றினை, “தக்கனைப்போ லோர்வேள்வி தான்செய்யத் தேவரெல்லா, மிக்கவவி யுண்ணவந்த வேலையின் கண்—துக்கமே, விண்டலமே தேராக மேதினியே வண்டிலெனக், கொண்டிழுக்கும் வாயு குரகதமாய்—மண்டும், அனலே சிலையாக வம்புலியே நாணாப், புனலே யடுசரமாப் பூட்டிச்—சினவடிவேற், சேனு பதிதானே தேர்நடவிச் செல்லவெதிர், வானோர்கள் கண்டு மருண்டோட,— ஆனைத, இந்திரனை மாலயனை யீராறு சூரியரைச், சந்திரனை மாதவரைத் தாக்கியே.—வெந்திறல்சேர், அந்தமகமுமடர்த்து வருஞ்சத்த,தந்துவையுமாய்த்த தகைபோற்றி” என்பதனுணர்க.

சத்தி—சக்தியிற்காண்க.

சத்திநாயனார்—அறுபான்மும்மைநாயன்மாருளொருவர். சோணாட்டுவரிஞ்சியூரில் வேளாண்குலத்திலுதித்தவர். சிவனடியரைத் தூஷித்தோர் நாவினை யரிந்தலையே தொண்டாகக் கொண்டு முத்தியடைந்தவர்.

சத்திமுத்தப் புலவர்—சத்திமுத்தமென்னுமூரிலே யிருந்தவராகலின் இப்பெயரேற்றவர். இவர் தமக்குற்றவறுமையால் பாண்டியனைக் கண்டு நிதிபெற்றுச் செல்லக்கருதி அங்குற்றுக் குளிரினாலும் மழையினாலும் வருந்தி யிருக்கையில் தந்துயரைநினைந்து மேலே பறந்துகொண்டு சென்ற நாரைகளை முன்னிலையாக்கி, "நாராய் நாராய் செங்கானாராய், பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன, பவளக் கூர்வாய்ச் செங்கானாராய், நீயுநின் மனைவியுந் தென்றிசைக்குமரியாடி வடதிசைக் கேகுவீ ராயி னெமதூர், சத்தி முத்த வாவியிற் றங்கி, நனைசுவர்க்கூரை கனைகுரற்பல்லி, பாடு பார்த் திருக்குமென் மனைவியைக் கண்டு, எங்கோன் மாறன் வழுதி கூடலின், ஆடை யின்றி வாடையின் மெலிந்து, கையது கொண்டு மெய்யது பொத்திக், காலது கொண்டு மேலே தழீஇப், பேழையு ளிருக்கும் பாம்பென வுயிர்க்கும், ஏழை யாளனைக் கண்டன மெனுமே" எனக் கூறுகையில், அவ்வழி நகர்சோதனைக்காகச் சென்றபாண்டியன் தன்மேற்போர்வையை யவர்மேல் வீழ்த்திக்காவலாளரால் வருந்தாது கொணர்வித்து, நீர்யார்? என, 'வெறும்புற்கையுமரி தாங்கிள்ளை சோறுமென் வீட்டில்வரும், எறும்புக்கு மாரப்பதமில்லைமன்னா" எனக்கூறுகையில் கவிபாடுதலைநிறுத்தி, மடத்திலுணவளித்தச் சின்னாள் வைத்திருந்து இவருணராது அவ்வீட்டினைக்கட்டுவித்துப் பல்வகைப்பொருளும் நிரப்பிக் குறைவொன்று மிலதாக்கி, ஒருநாள் செல்லும்படி கட்டளை தெரிவித்தனுப்ப, இவர் மிக்கவருத்தத்துடன் வீடுசென்று பார்க்கையில், யாவும் நிரம்பி யிருப்பப்பெருங்களிகொண்டவர். பின்னொருநாள் அரசன் இவரைத் தருவித்துக்ஷேமமெப்படியெனவினவ "முன்னென்னிருங் கலியாங், குறும் பைத் தவிர்த்த குடிதாங் கியைச்சென்று கூடிய பின், தெறும்புற் கொள்யானை கவளங்கொள்ளாது தெவிட்டியதே" எனக் கூறி அக்கவியைப் பூர்த்திசெய்து அரசனை யக மகிழ்வித்தவர்.

சத்தியகர்மன்— த்ருடவிரதன். விஜயன் மகன்.

சத்தியகன்— யாதவருள விருஷ்ணிவமிசத்தவன். இரண்டாம் சினிபுத்திரன். சாத்தியகி பிதா.

சத்தியகீர்த்தி—அரிச்சந்திரன்மந்திரி.

சத்தியகேது—சுகேதன்பௌத்திரன். விபுவின்பிதா.

சத்தியசிரவன்—(1) ஓரிருடி. இருக்குவேதாத்தியாபகன். (2) நரிஷ்யந்தவமிசத்து வீதிஹோத்திரன மகன்.

சத்தியசேனன்—கர்ணன் புத்திரன்.

சத்தியஜித்து—(1) வசுதேவன் தம்பியாகிய கங்கன் புத்திரரில் இரண்டாமவன். (2) துருபதனுக்குத் தனயன்.

சத்தியஞான தரிசனிகள் — சங்கரனை

குரவருள் பரஞ்சோதி முனிவருக்குபதேசித்தவர். அப்பரஞ்சோதி முனிவரே மெய்கண்டதேவருக்கு உபதேசித்தவர்.

**சத்தியதிருதி**—(1) சதாநந்தன் புத்திரன். சரத்துவந்தனெனறும் பெயருடையவன். வில்வித்தையில் மிகவல்லுநன். வனத்தில் உலாவிக்கொண்டிருந்தபொழுது ஊர்வசியைக் கண்டுகாமமிக்குவெளிப்பட்ட வீரியத்தை நாணல்மேல்விட அதினின்றும்ஒருபெண் மகவும் ஒரு ஆண் மகவுமுண்டாயின. அவ்வழிச் சென்றசந்தனு கண்டு அக்குழந்தைகளை யெடுத்து வளர்த்தனன். பெண் மகவு கிருபி. இவளைத் துரோணருக்குமனைவி யாக்கினன். ஆண்மகவுக்குக் கிருபனெனப் பெயரிட்டனன்; இவரேகிருபாசாரி. (2) மிதிலாநகரத்து மகாவீரியன் மகன். (3) புதனமரபிற்கிருதிமந்தன் புத்திரன்.

**சத்தியகாதர்**—நவசித்தருளொருவர்.

**சத்தியபாமை** — சத்திராஜித்து புத்திரி, கண்ணன் பிரியை. பாரிஜாதம் இவளுக்காகக் கண்ணனால் நிலவுலகுக்குக் கொண்டுவரப்பட்டது.

**சத்தியரதன்**--பௌமரதன் புத்திரன்.

**சத்தியவதி**—(1) ஒரு சாபத்தினாலே மீனுருக்கொண்டு யமுனா நதியில் வசித்திருந்த கிரிகையென்னும் அப்சரசு உபரிசரவசு என்போனது வீரியத்தை யுட்கொண்டு பெற்ற புத்திரி. [உபரிசரவசுவிற் காண்க]. அம்மீனை வலைஞன் கையிலகப்பட்டபொழுது அதன் வயிற்றிலிருந்து தாசராஜன் எடுத்துவளர்க்க வளர்ந்தவள். அதி சௌந்தரிய வதியாயினும் மீன் வயிற்றி லுதித்தமையால் முடைநாற்றம் வீசப்பெற்று மச்சகந்தி யெனப் பெயருற்றவள். பராசர முனிவருக்கு ஓடஞ்செலுத்தியபொழுது அவர்காமுற்று அந்நாற்றத்தை யகற்றி, பரிமளகந்தமுஞ்செய்து புணர வியாசரைப்பெற்றவள். பின்னர்சந்தனுமகாராசன் கண்டு காமுற்று மணம்பேச, அவ்வலைஞன் கங்காபுத்திரனாகிய தேவவிரதன் பட்டம் பெறுவா னன்றி என்மகள்வயிற் றுதிப்போன் பட்டம்பெறுவனாகின் யான்மகட்கொடைநேரேனென, காங்கேயன் அதனையுணர்ந்து அவனிடஞ் சென்று தான்மணஞ்செய்துகொள்வதில்லையென்று பீஷ்மஞ்செய்து பீஷ்மாசாரியெனும் பெயரேற்று அவளை மணமுடிப்பித்தனன். இவள் சந்தனுபாரியாகிச் சித்திராங்கதன் விசித்திரவீரிய னென்னும் இருபுதல்வரைப் பெற்றவள். சித்திராங்கதன் அப்பெயர்வகித்த கந்தர்வனாற் கொல்லப்பட்டும் விசித்திரவீரியன் புலிக்கோட்பட்டு மிறக்க, வியாசரால் அவர்மனைவியரிடம் திருதராட்டிரன் பாண்டு விதுரரைத் தேவரநியாயத்தால் உண்டு செய்தவள். (2) காதிராஜன்மகள். கௌசிகியெனப்படுவள். இவள்கணவன் இரிசிகன். நரமேதத்திற்குத் தம் புத்திரர் மூவரில் ஒருவனைக்கொடுத்துத் தரித்திர நீங்கியவன். ஜமதக்கினி முனிவர் தாய். இவள் கணவனோடுதீயிற்புகுந்துகௌசிகி நதியாக உருமாறியவள்.

**சத்தியவாகீசர்** — திரு அன்பிலாலந்துறையில் சிவபெருமானுக்கு வழங்குந்திருநாமம்.

**சத்தியவான்** — தியுமத்சேன னென்னுமமத்திரதேசத்தரசன் புதல்வன். இவனுக்குச் சித்திராசுவனென்றும் பெயர். இவன் மனைவி சாவித்திரி.

**சத்தியவிரதன்** —(1) திரிசங்குவுக்குரிய இடுகுறிப்பெயர். (2) வைவசுவதமநுவின் ஜன்மாந்தர நாமம். அந்தஜனனத்தில் திராவிட தேசத்தரசனும் விஷ்ணு பக்தனுமாக விளங்கியவன்.

**சத்தியஹிதன்** — உபரிசரவசுவின் மரபில் வந்த ஒருவன்.

**சத்தியோஜாதம** — சிவபெருமான் ஐந்து திருமுகங்களி லொன்று.

**சத்திராஜித்து** — யாதவரில் விஷ்ணு வமிசத்து நிமமுனன்மகன். இவன் மகள் சத்தியபாமை.

**சத்துருக்கினன்** — தசரதன் புத்திரரில் ஒருவன். இவன்தாய் சுமித்திரை. இவன் மனைவி குசத்துவஜன் புத்திரியாகிய சுருதகீர்த்தி. சத்துருக்களைக் கொல்வோ னென்பது சொற்பொருள்.

**சத்துருசாதன பாண்டியன்** — மதுரையையாண்ட எழுபத்து மூன்றாம பாண்டியன். புருடோத்தம பாண்டியனுக்கு மகன். கூன் பாண்டியனுக்குப்பிதா.

**சத்துருசித்து** — பிரதர்த்தன னென்றுஞ்சொல்லப்பட்டவன.

**சத்துருஜயபாண்டியன** — உக்கிரசேனபாண்டியன் புத்திரன். மதுரையையாண்ட மூப்பத்தெட்டாம் பாண்டியன்.

**சநகன், சநந்தனன், சநற்குமாரன், சநாதனன்** — பிரமனது மானசபுத்திரர்கள். இவர்கள் சிவபிரானை யடைந்து தம்மனமொடுங்கும் வண்ணந் திருவருள் புரிய வேண்டு மெனப்பிரார்த்திப்ப, இறைவர் கல்லால விருக்ஷ நீழலில் தக்ஷிணாமூர்த்தமாக நின்று யோக சமாதிகூடிச் சின்முத்திரை காட்டித் திரிபதார்த்த விலக்கண முபதேசிக்கப்பெற்றனர்.

**சநற்குமாரர்** — பிரமமானச புத்திரரிலொருவர். மகாதபஸ்வி. சதசிருங்ககிரியில் இவர் தவத்திலிருக்கையில், சிவபெருமான் காக்ஷிதந்தும் யோக நீங்கா திருந்தமை கண்ட திருநந்திதேவர் சினந்து 'ஒட்டகமாகுக' எனச்சபிக்க ஒட்டகமாயினவர். இதனை யுணர்ந்த பிரமன் வேண்டுகோளால் அவ்வுரு வகற்றித் திருநந்திதேவர் திருவருளால் பலநூல்களும உபதேசிக்கப் பெற்றவர். இவர்நந்திநாயகருக்குமுதன் மாணவர்.

**சநிபகவன், சநீசுவரன்** — சூரிய புத்திரன். இயமனுக் கிளைவன். நவக்கிரகங்களி லொருவன. கான்முடமாயுள்ளவன்.

**சந்தனு** — குருகுலத்தினன். பிரதீபன் புத்திரன். இவன் தாய் சுநந்தை. ஜேஷ்டமனைவி கங்காதேவி. அவளிடம் பிறந்தவன் காங்கேயன் தேவவிரதனென்னும் பெயர்களையுடைய பீஷ்மன். இளைய மனைவி பரிமளகந்தி யெனப்படும் சத்தியவதி. அவளிடம சித்திராங்கதன் விசித்திரவீரிய னென்னு மிருவர் பிறந்தனர். இவற்றின் விவரம் அவ்வப்பெயரின் வரிவடிவிற்காணக.

**சந்தனை** — ஒருநதி. அங்க தேசமார்க்கமாகச் செல்வது.

**சந்தானம்** — இருபத்தெட்டுச் சிவாக

மங்களிலொன்று. இது சிவபிரான் குண்டலமும் எழு உப பேதமும் ஆறாயிரங் கிரந்தமுமாக வுள்ளது.

சந்திமான்—இடையெழுவள்ளல்களி லொருவன்.

சந்தியை—ராக்ஷசி. சாலகடங்கடை யின்தாய்.

சந்திரகிரி—நரச பூபதியின் இராஜ தானி. தெலுங்க மன்னவர்க்குப் பலகாலம் இராசதானியாக விரு ந்தவிடமிதுவே.

சந்திரகுப்தன்—மௌர்ய ராசர்களிற் பிரதமமன்னவன். மகததேசத்தை மௌர்விய மன்னர்க்குப்பின் அர சாண்டவன். இவன்தாய் முரையெ னப்படுவள். இதுகாரணமாகஇவன் மரபினரைமௌர்விய ரென்ப.

சந்திரகேதன்—தசரத ராமன் தம்பி யாகிய இலக்குமணனது இரண் டாம் புத்திரன். சந்திரவக்கிரனெ ன்றும் நாமாந்தரமுடையோன்.

சந்திரசர்மன்—விஷ்ணுசர்மன் மகன். விக்கிரமார்க்கன்பிதா சதுர்வருண மங்கையரையு மணஞ்செய்தவன். அவரில் அந்தணப்பெண்பால் வர ருசியும், அரசப் பெணபால விக் கிரமார்க்கனும், வசியப்பெண்பால் பட்டியும், சூத்திரப்பெண்பால் பர் த்துருகரியும புதல்வராயுதித்தனர்.

சந்திரசேகரமூர்த்தி — சிவ மூர்த்தங் கள் அறுபத்து நான்கனுளொன்று. தக்ஷபுத்திரிகளான இருபத் தேழு கன்னிகைகளை மணந்த சந்திரன் அவருள் உரோகணியி னிடத்து அன்புபாராட்டி ஏனையோரைமுக நோக்கா னுயினன். அம்மங்கைய ரால் அதனை யுணர்ந்த தக்கன், மதிக்குப் பலவகையாக மதிகூறி யுங் கேளாமையின், கலை குறைக வென்சபிக்க, சந்திரன் இந்திரன் பிரமன் முதலிய தேவர்பால்முறை யிட்டும் பயன்படாது சிவபிரானி டம் விண்ணப்பிக்க, சிவ பிரான் அவனைத்தஞ்சிய ஒருகலையைச் சிர பினைகவைத்து நாளுக்கொரு கலை வளரவும், தக்ஷசாபப்படி குறைய வும் இறவாதிருக்கவும் வரமளித்த சிவமூர்த்தி.

சந்திரசேகரேசர்—திரு இலம்பயங் கோட்டூரில் சிவ பெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

சந்திரஞானம் — இருபத் தெட்டுச் சிவாகமங்களி லொன்று. இது சிவ பிரான் திருமார்பும், பதினென்கு உபப்பதமும மூன்றுகோடி கிரந்த முமாக விளங்கும்.

சந்திரதத்தன்—கப்பலிற் சென்று வா ணிகஞ்செய்த ஒருவணிகன் சாது வனை நாகர்மலையினின்று காவிரிப் பூம் பட்டினத்திற்குக் கப்பலேற்றி அழைதது வந்தவன்.

சந்திரதனயன்—கன்னோசி நாட்டர சன். அரிச்சந்திரன் மனைவி யாகிய சந்திரமதியின தந்தை.

சந்திரபாகை—சிந்து நதியின் உபநதி களி லொன்று.

சந்திரப்பிரபை—சைனமத ஸ்தாபக ரான இருபத்துநான்குதீர்த்தங்கர ரில் எட்டாவதாகத் தோன்றியவர்.

சந்திரமதி—மதிதயன் புத்திரி. இவள் ஜனிக்கும பொழுதே மங்கிலியத் தோடு பிறந்து அதுகாணப் படுபவ னுக்கே மனைவி யாகும் நியமம முடைத்தாயிருந்தவள். அரிச்சந்தி ரன்மனைவி. கற்புமுதலிய நற்குண நற்செயல்களை யுடையவள், விசு

வாமித்திரருக்கும் வசிட்டருக்கும் நிகழ்ந்த விவாதங்காரணமாக விசுவாமித்திரர் அரிச்சந்திரனைப் பலவாறு துன்பப்படுத்தியபோது அவற்றையெல்லாந் தன்கணவனோடிருந்து சகித்தவள். தன்கணவன்பட்ட கடனுக்காக ஓர்வேதியனுக்கடிமையாகி, தன்மகன் காட்டில் அராத்தீண்டியிறந்தானென்பது கேள்விப்பட்டும் அவ்வேதியனுக்குத் தான் செய்யவேண்டிய ஊழியங்களைச் செய்துவிட்டு அவ்விடை யிரவில் காட்டையடைந்து தன் மைந்தனை மயானங் கொணடுசென்று, சுடலை காக்கும் பறையனுக்கடிமைப்பட்டு அச்சுடலையைக் காவல்பூண்டிருந்த தன்கணவனையும் அவனுக்குண்டாயிருந்த விதியையுங் கண்டு கதறியழுதும் தன்கணவன் மனத்தளர்ச்சியடையாமலும் சத்தியந் தவறாமலும் நிற்கவேண்டுமெனமதிகூறியவள். இவர்களுண்மை தவறாமை கண்ட விசுவாமித்திரர் இறந்த மகனை யெழுப்பிப் பண்டுபோல அவர்களுடைய பாக்கியங்களையும் நாட்டையும் அடையச் செய்தனர். இவள் பூர்வஜன்மத்திற் சோதிமான் மகள். அவ்விவரம் சோதிமானிற் கண்டுகொள்க

சந்திரரேகை—ஓரப்சரசு.

சந்திரலோகம்—பிதிரர்வசிக்கும் ஒரு லோகம் - சுவர்க்கத்திலுள்ளது.

சந்திரவக்கிரன் — சந்திரகேதனிற் காண்க.

சந்திரஹாசன்— ஓரரசன் - பாலியத்திலே பெற்றோரை யிழந்து பலவகைத் துயருழந்துபின்னர் அரசுரிமைகைக்கொண்டு தக்ஷிணத்திலே யரசுபுரிந்தவன் - கண்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் பிரியசிநேகன்.

சந்திரன் — நவக்கிரகங்களிலொருவன். அத்திரிமுனிவர்க்கும் அநசூயைக்கும் பிறந்தவன். வேதியர் நக்ஷத்திரங்கள் ஓஷதிகள் யக்ஞங்கள் தவமுதலியவற்றிற்குத் தலைவன். கடவுளின் மனதினின்றும், திருப்பாற்கடல் கடைந்தபொழுது அதினின்றும் தோன்றியதாகவுங் கற்பபேதங்களாற்கூறப்பட்டவன்.

பிருகஸ்பதி முனிவர்பால் வித்தியாப்பியாசஞ் செய்து வருகையில் அவர் மனைவி தாரையைக் கூடிக்கலந்திருப்ப, அதனை யுணர்ந்த முனிவரால் க்ஷயரோகியாகச் சபிக்கப் பெற்றவன். இவனுக்குத் தாரையிடம் பிறந்தமகன் புதன்.

தக்ஷன் தனகுமாரத்திகள் அசுவினி முதலிய இருபத்தேழு பெண்களையும் சந்திரன் அழகிற் சிறந்தவனென மதித்து. மணஞ்செய்து கொடுக்கப்பெற்ற, அவருள் ரோகிணியிடத்தில் அதிக அன்புசெலுத்தி வந்தமையின் பிறமனைவியர் தந்தைக் குணர்த்த, தக்ஷன இவனை விளித்துப்பலவாறு மதிகூறிவிடுத்தும் அங்ஙனமே நடக்க, தக்ஷன் சினந்து 'நின்கலைகள் குறைக' எனச்சபிக்க, நாளொன்றுக்கொரு கலையாகக் குறைந்து ஒரே கலையுடன் சிவபிரானையடைந்து விண்ணப்பிக்க அவர் அவ்வொரு கலையினைச் சடையிலணிந்து இஃது இங்குள்ளதால் வளரவும் தக்ஷசாபத்தால் குறையவும், ஒரு கலை நீங்காதிருக்கவும் அநுக்கிரகிக்கப்பெற்றவன்.

சந்திராங்கதன்—ஒரு மன்னவன்

சந்திராசாரியர் — ஒரு சமஸ்கிருத பண்டிதர். காஸ்மீர நாட்டில் அபிமந்யன் காலத்திலே அவன் சமஸ்தான பண்டிதராயிருந்து பதஞ்சலி மகா பாஷியத்தைக் கற்பித்தவர் - [பாரதத்தில்வரும் அபிமந்யு வென்றையுறற்க.]

சந்திராசுவன்—தண்டாசுவன்.

சந்திராபம்—தணபதிநகரம் [சிவக.]

சந்திராபீடன்—உச்சயினி நகரத்தரசன். தாராபீடனெனும் அரசன் புத்திரன். காதம்பரி யென்பவளுக்குக் கணவன். காதம்பரியெனும வடமொழிக் காவியத்தின் கதாநாயகன்.

சந்திராலோகம்—காளிதாச கவியாற் செய்யப்பட்ட ஓலங்கார நூல்.

சந்திரிகைபீடம் — சத்திபீடங்கள் அறுபத்து நான்கனு ளொன்று. இது அரிச்சந்திரத்திலுள்ளது.

சந்திரோதயம் — சுதஞ்சனையின் நகரம் [சிவக.]

சந்தோபிசிதம்—வேதாங்க நூல்களிலொன்று இது வேதத்தில் உக்தை முதலிய சந்தோபேதங்கட்கு அக்ஷரசங்கியை யுணர்த்துவது.

சக்கதமந்தன்— (பு) நான்காஞ்சுமதியின் புத்திரன். இவன்மகன் கிருதி.

சச்நதி—(1) அலர்க்கன் மகன். இவன் மகன் சுநீதன் - (2) தக்ஷப்பிரஜாபதி புத்திரி. கிருதுவின் மனைவி. வாலகில்லியரைப் பெற்றவள்.

சந்நிதியப்பேசர்-திருச்சேறையில் சிவபெருமானுக்குவழங்குந்திருநாமம்.

சபரி } ஒரு பெரியவர். இராம பக்
சவரி } தர். பம்பாதீர்த்திலுள்ள மதங்காசிரமத்திலிருந்தவர்.

சபஸ்தன் — இக்ஷ்வாகு மரபினன். முதல் யுவனாசுவனுக்கு மகன். இவன்மகன் பிரகதசுவன். கௌட தேசத்திலே சாபஸ்தியென்று நகரமைத்த நிருமித்தவன்.

சபாநலன்—அனுவின் ஜேஷ்டகுமாரன். யயாதியின் பௌத்திரன்.

சபாநாதர் } சிவமூர்த்தங்களில் முக்
சபாபதி } கியமானதொருமூர்த்தி.
சபேசர் } சிவபெருமான் ஆன்மாக்கட்குப் பெத்த முத்திகளைத் திருவருள்செய்தற் பொருட்டுப் பஞ்சாக்கரமே திருமேனி யாகக்கொண்டு உமாதேவியார் காணும்படி பஞ்சகிருத்தியத் திருநடனத்தையெஞ்ஞான்றும் இயற்றுபவர். இச்சத் திருநடனம் மூன்று திருக்கரங்களாலும் இரண்டு திருவடிகளாலும் நிகழுமென்பர் - இதனை "தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற், சாற்றியிடு மங்கியிலே சங்காரம் - ஊற்றமாய், ஊன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி, நான்ற மலர்ப் பதத்தே நாடு" "மாயை தனையுதறி வல்வினையைச்சுட்டுமலஞ், சாயவமுக்கியருள் டானெடுத்து - நேயமாய், ஆநந்த வாரிதியி லான்மாவைத் தானழுத்தல், தாமெனந்தை யார்பாதந் தான்." "உரையுணர்வுக்கெட்டாவொருவன்மிகு பஞ்சாக்கரத்தால் வரைமகடான் பாதி— பரையிடமாக், காணும்படியே கருணையுருக் கொண்டாடல், தானெந்தை யார் பாதந் தான்." எனவருவன வற்றானறிக. பஞ்சாக்கர சொருபியாக நிற்பரென்பதனை "ஆடும் படிகேணல் லம்பலத்தி லையனே, நாடுந்

திருவடியி லேநகரங் - கூடு, மகர
முதரம் வளர்தோள் சிகரம், பகரு
முகம் வாமுடியப் பார்" என்பத
னுணர்க.

சிவபெருமான் திருக்கைலாய
மலை மேருமலை வடாரண்ணியம்
திருத்தில்லை திருவாலவாய் திரு
நெல்வேலி திருக்குற்றாலம் திருச
செளிச்சேரி முதலிய பலவிடங்க
ளிற் பலகாரணமாகப பலமுறை
பதம்பெயர்த்தாடினும் ஸ்ரீபஞ்சாக்
கரமே திருமேனியாகக் கொண்டு
பஞ்சகிருத்திய காரணமாக உமா
தேவியார் தரிசிக்கும்படி திருமால்
திருநந்திதேவர் பிரமத கணங்கள்
முதலானோர் தோற்கருவி தொளை
க்கருவி கஞ்சக்கருவி மிடறறக்கரு
வி முதலியவற்றிேனைேயாடுதிரு
நடனஞ் செய்திருப்பர். இவர்க்கு
நடராசரென்றும்பெயர்.

சபைஐந்து—சிவ பெருமான் பல
காரணமாகப் பலவிடங்களிற் பதம
பெயர்த்து நடித்திருப்பினும், சிற
ப்பாகச் சொலலப்படும் பஞ்சசபை
கள். அவை திருவாலங் காட்டி
லுள்ள இரத்தின சபையும், சிதம்
பரத்தி லுள்ள பொற் சபையும்,
மதுரையிலுள்ளவெள்ளிசபையும்,
திருநெல்வேலியி லுள்ள தாமிர
சபையும், திருக்குற்றாலத்தி லுள்ள
சித்திரசபையுமாம். இதனை "குட
திசை யதனின் மருவுகுற் றாலங்
கோதறு சித்திர சபையாங், குறற
மில் குணக்கிற் பழயனூர் மன்றங்
குலநவ ரதனமன் றென்பர், அடல்
விடைப் பாக னெல்லையம் பதியி
லம்பலந் தாமிர சபையாம், ஆல
வாய் மதுரை வெள்ளியம் பலமே
யணிதில்லைசெம்பொனம்பலமே."
எனும் இரட்டைப் புலவர் வாக்கா
லுணர்க

சப்தகுலபர்வதம்—கைலை இமயம் மந்
தரம் விந்தம் நிடதம் ஏமகூடம்
நீலகிரி யென்பன இவற் றுடன்
கந்தமாதனங் கூட்டி அஷ்டகுல
பர்வதமென்பதும் முண்டு.

சப்தசமுத்திரம் — உவர்நீர் நன்னீர்
பால் தயிர் நெய் கருப்பஞ்சாறு
தேன் இவற்றின் மயமாயுள்ளவை.

சப்தசாரசுவதம் — ஒரு புண்ணிய
க்ஷேத்திரம். வசிஷ்டர் முதலியமக
ருஷிகள் செய்த யாகத்திலே சரசு
வதிநதிஏழுபெண்களின்வடிவமாக
அம்மகருஷிகளுக்கும் தேவர்களுக்
கும் ஏவல் புரிந்து பேறுபெற்ற
விடம் அப்பெண்கள் சம்பிரபை
கனகாக்ஷி விசாலை சுரதங்கை
அமோகமாலா சுவேணி விமலோ
தகையெனப்படுவர்.

சப்தசிருங்கபீடம்—அறுபத்துநான்கு
சத்திபீடங்களிலொன்று. இதுமாது
புரத்திலுள்ளது.

சப்ததீவுகள — சம்பு பிலக்ஷ குச
கிரௌஞ்ச சாக சான்மல புஷ்கர
தீவுகள. பிரியவிரதன் தன்புத்திர
ராகிய மேற்குறித்தோர்க்குப் பிரித்
துக்கொடுத்தபூமி. ஒவ்வொன்றும்
முதலிலரசாண்ட அவ்வவர் பெய
ரால் வழங்கும்.

சப்தநரகங்கள்— அன்னல் இரௌர
வம் கும்பிபாகம் கூடசாலம் செந்
துத்தானம் பூதி மாபூதியென்பன.

சப்தநரகவட்டங்கள் — தமப்பிரபை
இமப்பிரபை தூமப்பிரபை வாலு
கப்பிரபை சாகரப்பிரபை இரத்தப்
பிரபை அழற்பிரபை யென்பன.

அவைமுறையே இருள் குளிர் புகைமணல் துயிலாமை இரத்தம் தீ இவற்றின் பாதை மிக்குள்ளன.

சப்தபாராயணம்—ஒருவடமொழியிலக்கநூல். பிரஜாபதி முனிவராயற்றியது. இதனை நூலொன்றிருந்ததாகக் கேள்வியேயன்றி இப்பொழுது உள்ளதாகக் காணப்படவில்லை.

சப்தபுரி—அயோத்தி மதுரை மாயை காசி காஞ்சி அவந்தி துவாரகை.

சப்தமாதர்கள்—அபிராமி மாயேசுவரி கௌமாரி நாராயணி வராகி இந்திராணி காளி. இவர்க்கு முறையே அன்னம் இடபம் மயில் கருடன் சீயம் யானை பேய் வாகனங்களும், மறை பினாகம் வேல் ஆழி கலப்பை வச்சிரம் சூலம் ஆயுதங்களுமாம்.

சப்தமுனிவர்— அத்திரி ஆங்கிரசன் கௌதமன் ஜமதக்கினி பரத்துவாசன் வசிட்டன் விசுவாமித்திரன் எனப் படுவோர். அன்றியும், அகத்தியன் ஆங்கிரசன கௌதமன் காசிபன் புலத்தியன் மார்க்கண்டன் வசிட்டனென்றுங் கூறுவர்.

சப்தமேகங்கள்—சம்வர்த்தம் ஆவர்த்தம் புட்கலாவர்த்தம் சங்காரித்தம் துரோணம் காளமுகி நீலவருணமென்பன. இவை முறையே மணி நீர் பொன் பூ மண் கல் தீ இவற்றைப்பொழியுமென்பர்.

சப்தலோகம்—பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் மகாலோகம் ஜனலோகம் தபோலோகம் சத்தியலோகம் இவை மேலேழுலோகங்கள். அதலம் விதலம் சுதலம் தராதலம் ரசாதலம் மகாதலம் பாதலம் இவை கீழேழுலோகங்கள்.

சப்தவிருஷிகள்—சப்தமுனிவர்களிற் காண்க. ஒரு நக்ஷத்திர கூட்டத்திற்கும் இப்பெயர் வழங்கும். அது ஏழு நக்ஷத்திரங்களையுடையது. அதனருகே ஒரு சிறுநக்ஷத்திரம் அருந்ததியெனவும் வழங்கும்.

சமசோர்ப்பேதம்—ஒருதீர்த்தம.

சமடை—தருமராஜனோடு தீர்த்தயாத்திரைசெய்த ஓரிருடி.

சமணசமயப்பாகுபாடுகள் — ஆசிவகவாதம் நிகண்டவாதமென இருவகைப்படும.

சமணர்—அருகனை வழிபடுஞ் சமயத்தினர். இவர் ஆருகதர் க்ஷபணர் ஜைனர் என்றும் பெயருறுவர். ஆன்மாவும் உலகமும் அநாதி நித்தியமாதலின் உலகுக்குக் கடவுளில்லையென்றும முற்றத்துறந்த ஜினனே தலைமுதலியென்றுங்கூறுவோர். இவருக்கு ஆதிகுருமூர்த்தி அருகன். இவர்கள் தீர்த்தங்கரர்கள 1 விருஷபர், 2 அஜிதர், 3 சம்பவர், 4 அபிநந்தனர், 5 சுமதி, 6 பத்மப்ரபை, 7 சுபார்சுவர், 8 பதமப்ரபை. 9 புஷ்பதந்தர், 10 சீதளா, 11 சிரேயாம்ஸர், 12 வாசுபூஜ்யர், 13 விமலர், 14 அநந்தர், 15 தருமர், 16 சாந்தி. 17 குந்து, 18 அரர், 19 மல்லி, 20 முனிசுவ்ரதர், 21 நமி, 22 நேமி, 23 பார்சுவர், 24 ஸ்ரீ வர்த்தமானர் முதலியோர். திருஞான சம்பந்தமூர்த்திசுவாமிகள் காலத்தில் பெருகியிருந்த இச்சமயம் அவரைப் பகைத்துச் சிறிது குறைந்தது. இப்பொழுதும இச்சமயிகள ஒரோவிடங்களில் அருகரென்பதற்கேற்க அருகியிருக்கின்றனர்

சமந்தகமணி—ஒருமணி இது சத்திராசித்துவுக்குச் சூரியனாற் கொடுக்கப்பட்டது.

சமந்தபஞ்சகம்—திரேதாயுகதுவாபரயுகசந்தியிலே பரசுராமர் க்ஷத்திரியரைக்கொன்று அவர்களுதிரத்தை ஐந்துதடாகங்களில்நிரப்பிஅசனாற்பிதிர் தர்ப்பணஞ் செய்தமையின் அவ்விடம் சமந்தபஞ்சக மெனப் பெயரேற்றது. அவ்விடமே பிற்காலத்தில் கௌரவர்க்கும் பாண்டவர்க்கும் போர் புரியுமிட மாயினமையின் குரு க்ஷேத்திர மெனப் பெயரேற்றது.

சமந்தம்—இரத்தின தீவ மென்னும் இலங்கைத்தீவின் மேன்மாகாணத்தில் புத்தபாதக் குறியுள்ள மலை. இது புத்தபாத பீடிகைகளிலொன்று. இதனை ஆடம்ஸ்பீக் என இங்கிலீஷில் வழங்குவர்.

சமயதிவாகரவாமனமுனிவர் — நீலகேசித் திரட்டின் உரையாசிரியர். இவரைப்பற்றிய பிற விடயங்கள் ஒன்றுந்தெரியவில்லை.

சமரகோலாகலபாண்டியன்—மதுரையையாண்ட நாற்பத் திரணடாம் பாண்டியன். இவன்பிதா விக்கிரமகஞ்சுகபாண்டியன.

சமரன்—காம்பிலிகாட் டரசன். நீபனுடைய மூத்தமகன். இவன்புத்திரர் பாரன் சுபாரன் சதசுவனெனு மூவர். [னொன்று.

சமனை — சத்திகலைகன் பதினாறனு

சமனொளி—சமந்தம் காண்க.

சமன்—(1) இயமதருமன் (2) தருமனுக்குச் சிரத்தை யென்பாளிடத் துதித்த ஜேஷ்டகுமாரன். இவன் தம்பியர் காமன் ஹர்ஷனெனப் படுவோர். இவன்மனைவி சம்பிரீதி.

சமானன் — தசவாயுக்களிலொன்று. கந்தசரசக் குழியிற் சந்திடைகிற்பது.

சமிஞ்ஞாதேவி — சஞ்ஞிகையிற் காண்க. இவளுக்குப் பிரபாவதி யென்றும் பெயருண்டு.

சமீகன்—(1) ஒரிருடி. சிருங்கிமுனிவன் பிதா. ஒருகாலத்தில் "நீயெனக்குப் பிரியனாயிருந்து என்னைக் காக்க" என்றெழுந்த அசரீரியை ஒரு ஸ்திரீவாக்கியமென்று கருதி மனதிற் காமங்கொண்டு தன் சுக்கிலத்தை அங்கிருந்த ஒருலர்க்க சருகில்விட, அச்சுக்கிலத்தி னின்று மகாரோஷமுடைய பிருங்கியென்பவன் இடபமுகத்துடன் ஜனித்தனன் [சிவபு] (2) போஜவமிசத்திலுதித்த ஒரு மன்னவன்.

சமீசி—ஓரப்சரசு.

சமுத்திரன் — சகரன் - சகரராற் றோண்டப்பட்டுச் சாகரமெனும் பெயர் கடலுக்கானமையின் சமுத்திரஞ் செய்தவனெனும்பொருளில் வந்தபெயர்.

சம்சப்தகர்—சத்தியரதன் சத்தியசேனன் சத்தியகர்மன் சத்தியவர்மன் முதலானோர். இவர்சசர்மன்தம்பியர்.

சம்சிருதன்—மிதிலைவமிசத்தரசர்களிலொருவன்.

சமபந்தசரணாலயர் — கந்தபுராணச் சுருக்க நூலாசிரியர். இவர் கந்தபுராணச் சரிதைகளை ஒருசிறகூறும் பிசகாமல் சங்கிரகித்துச் சொன்னயம் பொருணயம் மடக்கு திரிபு அலங்காரம் கற்பனை முதலிய வழுக்களுடன் அதி விசித்திரமாகச் செய்த சிறந்த கவிவாணர். இவரி

யற்றியநூல் கந்தசஷ்டி விரதகாலத்துப் பலராற் பாராயணஞ்செய்யப்படுகிறது. படிப்போர்மனத்தை யுருக்கும் அன்புமயமாய் விளங்குவது. அதுபோன்ற நடையையுடையவேறொருநூலும இது காறுமில்லை.

சம்பந்தமூர்த்தி சுவாமிகள் — திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளிற் காண்க.

சம்பந்தாண்டான் — சக்தி யுபாசகரா யிருந்த ஒருவர். பிரபுடதேவராஜனுக்கு அருணகிரிநாதரைப் போல வேண்பரா யிருந்தவர். இவரைப் பற்றிய பிறவிடயங்களை அருணகிரிநாதரிற்காண்க.

சம்பரன் — கிருஷ்ணன் மனைவி உருக்மிணியிடம் பிறந்த பிரத்யுமனனைச் சிசுவா யிருக்கையில் திருடிச் சென்று சமுத்திரத்திலிட்டவன். அச்சிசுவை மகரமொன்று விழுங்கிச் சிலதினங்களில் வலைஞன் கையிலகப்பட, வலைஞன் சம்பரனிடங் கொடுக்க, அவன் தன்மனைவி மாயாவதியிடங் கொடுக்க, அவள் அதனைச் சமைக்கப்பிளந்தபொழுது அழகுருபமுடைய சிசுவாக்கண்டு வளர்க்க வளர்ந்து, பிரத்யும்னன் தன்னைக் கடலிலிட்டவன் சம்பரனே யென்றுணர்ந்து அவனைக்கொன்று மாயாவதியுடன் தந்தைபாலடைந்தனன். பிரத்யுமனன் மன்மதாம்சமாதலின் இவனும் மன்மதனும் இதுகாரணமாகச் சம்பராரியெனப் பெயர்பெற்றனர்.

சம்பவர் — ஜைனமதாசாரியரான இருபத்துநான்கு தீர்த்தங்கரரில் மூன்றாவதாக்கத்தவர்.

சம்பவாசுகன் — பாரிகிஞ்சுகன்.

சம்பன் — (1) அரிதனமகன். இவன் மகன் சுதேவன். (2) புருகுலாக்ஷன் மகன். இவனால் பம்பாய் நகரம் நிர்மிக்கப்பட்டது.

சம்பாதி — (1) அருணன் ஜேஷ்டகுமாரன். இவன் தாய் சியேனி. இவனிளவல் ஜடாயு. இவன் மகன் சுபார்சுவன். சம்பாதி ஜடாயு விருவரும் பக்ஷிரூபிகளாய்ப் பிறந்து சூரியமண்டலவரையிற் பறந்து சென்று சிறகுகள் தீய்ந்து வீழ்ந்து சம்பாதி கடலோரத்திலும் ஜடாயு தண்டகாரணியத்திலு மிருக்கையில், இராவணன் சீதையை யபகரித்துச் செல்லுதலைச் சடாயு கண்டு அவ்வரக்கனை யெதிர்த்துப் போர் புரிந்து அவனாற் சிறகினை வெட்டப்பெற்று மரணாவஸ்தையிலிருந்து அவ்வழி வந்த இராமலக்ஷ்மணருக்கு விடயத்தை வெளியிட்டு இராமனாற் சமஸ்காராதிகள் செய்யப் பெற்றவன். சம்பாதி சீதையிருக்கையை அநுமானுக்குணர்த்தி இமாசலஞ்சென்றவன். (2) இராக்கதன். மாலியின் மகன். விபீடணனுக்கு மந்திரி.

சம்பாதிதன் — பண்டு சூரியனொருவன் சம்புவைப்பூசித்து நாரதரால் கிடைத்த குட்ட நோயைத் தவிர்த்துக்கொண்டவன். [காசிகா]

சம்பாதிபுரம் — புள்ளிருக்கு வேளூர். இது ஆதியில் சம்பாதி பூசித்ததிருத்தலமாகலின் இப்பெயர்பெற்றது. இது வைதீசுரன் கோயிலெனவும் வழங்கும்.

சம்பாதிவனம் — காவிரிப்பூம்பட்டினத்தைச் சார்ந்திருந்த சோலை. சம்

பாதிபுரத்திற்காண்க.

சம்பாபதி—சம்புத்தீவத்தின் அதிதேவதையின்பெயர். சம்பு மரத்தின் கீழிருந்து நோற்றமையின் இப்பெயரேற்றனள். இவள் வசித்தமையின் ஆதிகாலத்தில் சம்பாபதியெனப்பெயர் பெற்று, பின்புகாவிரிநதிச்சம்பந்தத்தால் காவிரிப்பூம்பட்டினமெனப் பெயர் பெற்றது. புத்திர சோகமுற்ற கோதமைக்கு, சக்கரவாளக் கோட்டத்துள்ள எல்லாத் தேவர்களையும் வருவித்துக் காட்டி, அச்சோகமகற்றி அவளைத் தேற்றியவள். இவளகோயில் குச்சரக்குடிகை யெனப்படும். [மணி]

சம்பிரன்—சிவபெருமானால் ஹரிகேசனுக்குக் கொடுக்கப்பட்ட அடிமைகளிலொருவன். [சிவ பு]

சம்பிரீதி—சமன் மனைவி.

சம்பு—(1) சிவன் (2) தருவன்மனைவி (3) சம்பாபதி.

சம்புகேசுரர்—திருவானைக் காவலில் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

சம்புத்தீவு—மகாத்தீவுகளி லொன்று. இதுநாவலந்தீவெனவும் வழங்கும்.

சம்பூதி-(1) சுமனசன் (2) திருதன்மகன்.

சம்மியன்—யாககாலத்தில் முதலிலே அவிபெறுதற்குரிய அக்கினி. இவன் பிதா பிருகஸ்பதி, இவன் மனைவி சத்தியை. [நகரம்.

சம்யமனி—இயமனது இராஜதானி

சம்யாதி—(1) நகுஷன் மகன். யயாதிக்கிளவல் (2) புதன்மரபில் வந்த சரியாதி.

சம்வருணன்—(1) அஜமீடன் புதல்வரிலொருவன். இவன்மனைவி சூரியன்மகளாகிய தபதி. இவன் புதல்வன்குரு. (2) புதன்மரபில் வந்த இருக்ஷன்மகன்.

சம்வர்த்தம் — சப்த மேகங்களி லொன்று இது மணிமாரிபொழிவது.

சம்வர்த்தன்—அங்கிரசன்மகன். பிருகஸ்பதிக்கிளவல். இவனுக்கு உதத்தியனென்றும் நாமாந்தரமுண்டு.

சம்ஸ்கிருதம்—ஒருபாஷை. இதுதேவபாஷை ஆரியம் கீர்வாணம் வடமொழி முதலிய பெயர்களான் வழங்கும். சம்ஸ்கிருத மென்பதற்கு நன்றாகச்சுத்திகரிக்கப்பட்டதொரு பாஷையென்பது பொருளாம். இது இன்னகாலத்திற் றோறறிய தென்பதற்கியலாது. இமாசலத் திற்கும் விந்தகிரிக்கும் இடையிலுள்ள தேசங்களில் [ஆரியதேசத்தில்] வழங்கியபாஷை. இப்பொழுது அத்தேசங்களிற் பிராகிருத பாஷைகளே மிக்கு வழங்குகின்றன. வேதாகமபுராணேதிகாசாதி நூல்கள் யாவும் இப்பாஷையிலேதான் விளங்குகின்றன. இப்பாஷைக்குச், சிவபெருமானே மகேசுவர ஸூத்ரமெனும் பெயரால பதினான்கு சூத்திரங்களடங்கிய இலக்கண மருளிச்செய்தனர். பிருகஸ்பதி முனிவர் அந்த மகேசுவரஸூத்ரத்தை முதனூலாகக்கொண்டு சப்தபாராயணமெனப் பெயரிய இலக்கண மியற்றினர். முதனூலும் வழிநூலுமாகிய அவ்விரண்டினையுங் கொண்டு இந்திரன் தன்பெயரால் ஐந்திர மெனப் பெயரிய இலக்கணஞ் செய்தனன். இவற்றின மூலமாக காப்யபர் கார்க்கியர் காலவர் முதலிய விருடிகள் தத்தம்பெயரால இலக்கணங்களியற்றினர். பிற்காலத்தில் பாணினி முனிவர் மகேசுவர ஸூத்ரத்தின்

வழியாகப்பாணினீய மெனும் வியாகரணஞ் செய்தனர். இப்பாஷை ஆதிகாலத்தில் முனிவர்களாலும் மத்தியகாலத்தில் பல அரசர்களாலும் பிற்காலத்தில் பண்டிதர்களாலும் விருத்திசெய்யப்பட்டது. இப்பாஷையில் எவ்வகைய விஷயத்தையும் விளக்கும்படி வகைக்குப் பலநூல்கள் ஏற்பட்டிருக்கின்றன. இப்பாஷையிற் சொல்லப் படாத விஷயம் ஒன்றுமே யிருக்க மாட்டாதென்றும், இப்பாஷையின் அருமைபெருமைகளை யெடுத்துவிளக்க ஆற்றலுடையார் துர்லபமென்றும் இவர் சொல்லுவர்.

சம்ஹுதாசுவன்—பரிகிஞைசுவன்.

சம்ஹராதி — இராக்ஷதன். சுமாலி மகன். [லாதன் தம்பி.

சம்ஹலாதன் — தைத்தியன். பிரஹு

சயகீயசவ்வியன் — ஒருமுனிவன். தன் மாணவனொருவன வேதவல்லுநனுயிருந்தும கொலைகளவுமுதலிய மகா பாதக கருமங்களைச்செய்வது நோக்கி, காசிப்பதியை விட்டுப் புறஞ்செல்க வெனக்கடிய, அவன் விந்தமலை கோதாவிரிநதி வீமாநதி முதலிய விடங்களிற் சஞ்சரித்து இறுதியில் ஸ்ரீ சைலமடைந்து குமாரக்கடவுளை நோக்கித் தவம் புரிகையில், அவ்வழிவந்த அகத்திய முனிவர் திருவாக்கால் காசி காசி யெனக் கூறியது கேட்டுப் பாவ நீங்கி நல்லுருவேற்று அகத்திய முனிவரால் குமாரக் கடவுளைத் தரிசித்து உத்தமநிலையை யடைந்தவன்.

சயங்கொண்டான்—கலிங்கத்துப் பரணியெனு நூலாசிரியன். இவன் பரணிப் பிரபந்தம் பாடுதலில் வல்லவனென மேதாவிகள் மதித்துளர்.

சயசேனன் — பவகிரிபுரத்தரசன்

சயந்தகுமாரன்—இவன் சாரகுமாரனெனவும் படுவன். இவனுக்கு இசை யுணர்த்தற் பொருட்டே சிகண்டியாசிரியர் இசைநுணுக்க மெனு நூலியற்றினர்.

சயந்தம் — ஒரு நாடகத்தமிழ்நூல். இதிற்சில சூத்திரங்களே யுளவென்றும் இந்நூல் இறந்தொழிந்ததென்றும் அடியார்க்கு நல்லார் எழுதியுளர்.

சயந்தன்—இந்திரன்மகன். பானுகோபனேடுபொருதவன். சூரனுலிடப்பட்ட சிறையிலிருந்து முருகக்கடவுள் அருள்பெற்றச் சூரசங்காரத்தின் பின் சிறைநீங்கித் தன் பதமடைந்தவன்.

சயமதி — ப்வணமாதேவன் மனைவி. [சிவ.க.]

சயப்பிரபை — சடியரசன் புத்திரி. திவிட்டன் மனைவி. [சூளா.]

சயம்பூல் — வடமலையி லரசுபுரிந்து துறவேற்றவன்.

சயித்தகம்—சிற்பநூல் முப்பத்திரண்டனுளொன்று.

சரசுவதி— (1) பிரமன்மனைவி. பிரமனாலேயே படைக்கப்பட்டு அவருக்கே பாரியானவர். இவர் வித்தைகளுக்கெல்லாம் அதிதேவதையாக விளங்குதலின் எழுத்தக்கிழைவி கலைமகள் பனுவலாட்டி முதலிய திருநாமங்களுடையவர். சரற்காலத்திலே பூசிக்கப்படுகாரணத்தாற் சாரதாவெனப் பெயருடையவர். அக்ஷமாலிகை கிளி கமலம் புஸ்தகம் இவற்றை யேந்திய

நான்கு திருக்கரங்களையுடையவர். காயத்திரி சாவித்திரி யென்றுங் கூறப்படுவர்.

சரசுவதிக்குச் சிரம் உபநிஷதமும், நான்குகைகள் நான்குவேதமும், முகம்பிரமவித்தையும, கண்கள் எண்ணும் எழுத்துந்தனங்கள் சங்கீதமும் சாகித்தியமும், வயிறு ஸ்மிருதியும், பாதங்கள் புராணேதிகாசங்களும், யாழ் ஓங்காரமுமாகத் தத்துவப்பொருள் கூறப்படும்.

பிரமன் ஒருகாலத்தில்தான்செய்தயாகத்திற்குச் சரஸ்வதி வரத்தாழ்த் தமையின், இடைக்குலத்துதித்த கன்னிகையாகிய காயத்திரியையிரண்டாம்பாரியாகக்கொண்டனர். அது காரணமாகத் தேவரெல்லாம் சரசுவதியாற் சபிக்கப்பெற்றனர். சரசுவதி அவ்யாகத்தையழிக்க வேகவதியெனும் பெயரிய நதியுருவாய்ப் பெருகிவந்து வழியில் திருமால் சயனித்திருப்பது கண்டு வளைந்துபோய் விட்டதாகவும் காஞ்சிபுராணங் கூறும்.

வேதம்பசுவாகவும் அதன்சாரம் பாலாகவும் அச்சாரத்தைக் கவர்ந்தடங்கியிருப்பது காயத்திரி சூத்திரமாதலின் அதனை இடையர்குலக் கன்னிகையாக உருவகஞ் செய்யப்பட்டது.

வேதசாரமாகிய காயத்திரி சூத்திரம் வேதியர்நால்காலைமாலைகளில் தவறாது ஓதப்பட்டு வருவது. (2) அக்கிசாரன் மனைவி. (3) சப்தநதிகளிலொன்று.

சரணங்கரர்—புத்தர்களில் மூன்றாவதாகத் தோன்றியவர்.

சரத்துவந்தன்—சதாநந்தன் புத்திரன் இவனுக்குச் சத்தியத்திருதியென்றும் பெயர்.

சரபங்கர—ஒரு மகருஷி. இவர் தண்டகாரணியத்திலேவசித்திருந்தவர். தசரதராமர் ஆங்குற்ற பொழுது இவரைத் தரிசித்தனர். இவரை இந்திரன்முதலிய இமையவர்கள் தண்டகாரணியத்திற்கு வந்து வந்தனை வழிபாடுசெய்து சுவர்க்கத்திற்குக் கொண்டு சென்றனர்.

சரபமூர்த்தி—அஷ்டாஷ்ட மூர்த்தங்களிலொன்றாகிய சிவமூர்த்தி. எட்டுக்காலும் நெடியவாலும் இருமுகமும் சிறகும் உருத்திரமும் பேரார்ப்பும் கொண்ட புள்வடிவாக, நரசிங்கத்தின் வீறடக்கியவர். இவ்வரலாற்றினை "நன்றாலிரண்டு திருவடியு நனிநீள் வாலு முகமிரண்டுங், கொன்றார் சிறகு முருத்திரமுங் கொடும்பேரார்ப்பு மெதிர்தோற்றச், செந்நீர் பருகிச் செருக்குநர மடங்கலாவி செகுத்துரிகொண், டொன்றார் குலங்கண் முழுதளித்த வுடையான் சரபத் திருவுருவம்" எனும் காஞ்சிபுராணச் செய்யுளானறிக. [சரபம்-எண்காற்புள்] இம்மூர்த்தம் சிம்ஹக்கமென்றும் பெயர்பெறும்.

சரபன்—சுக்கிரீவன் சேனாவீரரிலொருவானரன். இவன் பிதா பர்ச்சன்னியன்.

சரபோஜி—தஞ்சாவூரில் அரசுசெலுத்திய மகாராஷ்டிரமன்னருளொருவன். இவன் சோணாட்டிலுள்ள சிவாலய விஷ்ணுவாலயங்களைப் புதுக்கி நித்தியகட்டளைமுதலியன நியமித்தவன். இற்றைக்கு நானூற்றெண்பது வருடங்கட்கு முன்னி

ருந்தவனென்னத் தெரியவருகிறது.

சரமை- சைலூஷனென்னுங் கந்தர்வன்
புத்திரி. விபீஷணன் மனைவி
இவளே இராமாயண யுத்தத்தில்
அப்போதைக் கப்போது நடக்கும்
விடயங்களைச் சீதா தேவிக்குச்
தெரிவித்து வந்தவள் இவள் மகள
திரிசடை. இவளும் சீதைக்குப்
பெருந் துணையாயிருந்தவள்.

சரயாதி—(1) வைவசுவத மனுவின்
புத்திரரி லொருவன், இக்ஷ்வாகு
வுக்கிளவல். இவன் உத்தானபர்கி
ஆனர்த்தன் பூரிசேனனெனும் புத
லவரையுஞ்சுகன்னிகையெனும்புத்
திரியையும்பெற்றவன்சியவனனுக்
குப் பெண்ணைக்கொடுத்தவன். அசு
வினிதேவர்கட்கு அவி கொடுக்கமு
தலிற்றொடங்கியவன.(2) சம்யாதி

சரயுநதி—அயோத்திக்குவடமேற்கிற்
பாயும் ஒருநதி இது கோசகிராவெ
னும்பெயரால்வழங்குகின்றது.

சராமமுதலியார்—திருவெண்ணெய்
நல்லூர்ச்சடையப்பமுதலியாரக்கிள
வல்.அன்னதாதாவுந தமிழ்க்கவிப்
பிரியருமாக விளங்கிக் கம்பராற்
புகழப்பெற்றவர்.

சரவணபவன்—முருகக்கடவுள்.

சரவணம்—இமய மலையருகே தருப்
பைக்காட்டையுடைய தொருபொ
ய்கை. இதுவே குமாரக்கடவுளது
திருவவதாரஸ்தானம்.

சராசந்தன்—ஜராசந்தனிற்காண்க.

சரியன்—நரிஷியந்தன் மரபில் வந்த
ஒருமன்னன்.

சருவை—பார்வதி.

சர்ப்பபுரேசர்—திருப்பாதாளேச்சுர
த்தில் சிவ பெருமானுக்குவழங்குந்
திருநாமம்.

சர்மணவதி — ஒருநதி. விந்தகிரியி
லுதித்து வடக்கேசென்று யமுனை
யிற் கலப்பது.

சர்மிஷ்டை—விருஷபர்வன்புத்திரி.
யயாதியின் இரண்டாம்புதல்வி.

சர்வகாமன் — இக்ஷ்வாகு வமிசத்து
இருதுபர்ணன்மகன். இவன் மகன்
சுதாசன்.

சர்வங்கஷம்—மாகமெனுங் காவியத்
தின்வியாக்கியானம.

சர்வதேஜசு—வியஷ்டி மகன். இவன்
தாய் புஷ்கரிணி மனைவி ஆகூதி.
புத்திரன சக்ஷுர்மனு

சர்வபதி—பட்டிகாவியத்திற்கு மல்லி
நாதகவியாற்செய்யப்பட்ட வியாக்
கியானம்.

சர்வர்த்தி—வற்சரன்மனைவி. புஷ்பார்
ணனைப்பெற்றவள்.

சர்வவித்தியாசாரம் — இதுவே அக்
கினிபுராணத்திற்கு வழங்குவதொ
ருசிறப்புப்பெயர்.

சர்வன —(1) சிவபெருமான் (2) அஷ்
டமூர்த்திகளிலொருவன்.

சர்வாணிபீடம்—சத்திபீடங்கள் அறு
பத்துநான்கனுளொன்று. இது மத்
தியமாபிதத்திலுள்ளது

சர்வோசதம்—சிவாகமங்கள் இருபத்
தெட்டனுளொன்று. இது சிவபிரா
னுக்கு உபவீதமும்,ஐந்து உபபேத
மும், இரண்டிலக்ஷங் கிரந்தமுமாக
வுள்ளது.

சலந்தி—(1) சிவகன்றேழர் ஐந்நூற்
றுவரி லொருவன். (2) சமுத்திரத்
திற்கு நாமாந்தரம்.

சலந்தரன்—இந்திரனொரு காலத்திற்
கைலையை யடைய, சிவபெருமான்
ஓருருத்திர வடிவேற்று வழியில்
நிற்ப, இந்திரன் சினந்து தன்கையி
லிருந்த வச்சிரத்தை யுடலிற்றாக்க

அதுபொடியாக, சிவபெருமான் சினந்தமையின் உடலில் வெயர்வுண்டாக, அவ்வெயர்வை வழித்தெறிந்து கிழைவடிவு காட்ட, இந்திரன் பெரிதும்பயந்து அபராதமன்னிப்பு கேட்டனன். சிவபிரான் அங்ஙனமே யநுக்கிரகித்தனர். இறைவனெறிந்த வெயர்வு கடலிடை வீழ்ந்து ஒருபுத்திரவடிவேற்ப, சமுத்திரராஜன் மகன்மைகொண்டு வளர்ப்பவளர்ந்து, பிரமனால் ஜலந்தரனென நாமமிடப்பெற்று, காளைப் பருவமுற்று அவுணருடன் கூடி ஆற்றல்மிகுந்து, மயனால் ஒரு நகரஞ்செய்வித்துக்கொண்டு, காலநேமியின் புத்திரி பிருந்தையை மணஞ்செய்து தேவர்களைத் துன்புபுரிந்து தேவர்பலரையும் எதிர்த்துவென்றுகொண்டு சிவபிரானொருவனேயெஞ்சிநிற்றலின் அவனையும் வெல்வேனென்று இறுமாந்து கைலையைநோக்கிப்புறப்படுகையில், கற்பிற் சிறந்த பிருந்தை தடுப்பவுங் கேளாது சேனாசமுத்திரத்துடனே கைலைசாருக்கு வருகையில், அங்கு அடைக்கலம்புக்கிருந்த தேவர்கள் நடுங்க, சிவபிரான் அவர்களைத்தேற்றி ஒருவிருத்த வேதிய வடிவுடன் சென்று சலந்தரனை யணுகி "நீயார்? யாதுகருதிச்செல்கின்றனை. யான் சிவபிரானுக்கு இரண்டாவதானவன். நீ சிவனுடனே செருச்செய்யவல்லையேல் இவ்வலயத்தை யெடுக்க" என்று தமது திருவடியால் விருத்தாகாரமாக நிலத்தைக் கீற, சலந்தரன் இதுசாலவெளிது என்று இருகரங்களாலு மெடுத்து மார்பிலும் புயத்திலுந் தாங்கிச்சிரமிசை வைத்துக்கொள்ள அஃது இருபிளவாகப்பின்னுஞ்சிவபிரான் திருக்கரத் தெய்தியது. சலந்தரனிறந்தனன். அவனுடன்வந்தசைநியங்கள் இறைவன் விழித்தீயாலெரிந்தொழிந்தன. இதன் எஞ்சிய சரிதையை சுதர்சனத்திலும் பிருந்தையிலுங் காண்க.

சலன்—(1) பரீக்ஷித்துவின் குமாரன். இவன் தாய் சுசோபை. இவன் தம்பி தலன். வாமதேவருஷியின் குதிரையை இவன் கவர்ந்து கொண்டு அவர் கேட்பவுங் கொடுக்க மறுத்தமையின் அம்முனிவர்கோபாக்கினியால் தன் தம்பியுடன் இறந்தவன். (2) பலன் மகன்.

சல்லியம்—ஒருவித்தை.

சல்லியன்—(1) மத்திரதேசத்தரசன். நகுல சகதேவர்க்குத் தாய்மாமன். மாத்திரி சகோதரன். பகைமன்னர்க்குச் சல்லியம்போன்றானாகலின் இப்பெயரேற்றனன். இவன் பாரதப்போரில் கர்ணனுக்குச் சாரதியாயிருந்து தருமராசனாற் கொல்லப்பட்டவன். (2) சோமதத்தன் மகன். (3) விப்பிரசித்திமகன்.

சவனன்—(1) ஓரிருடி. பல வருடம் யோகத்திலிருந்து புற்றுமூடிட மங்கைப்பருவத்தோர் வேடுவப் பெண் அப்புற்றினைத் தோண்ட அவர்கண் காயப்பட்டு அக்கிருத் தெழுந்தவர் அவளை அரசன் முன்விட அரசனுபசரித்திருத்தி அசுவினிதேவர்களாற் கண் பெறச் செய்ய அக்கிராதப் பெண்ணை மோகித்து வாலிபதேகத்துடன் அநேக காலங் கூடிவசித்தவர். (2) பிரிய விரதன் புத்திரரிலொருவன். புஷ்கரதீவைத் தன்பாகமாகக்கொண்டவன்.

சவுதாசன்—கன்மாடபாதனுக்குநாமாந்தரம்.

சவுந்தரநாயகி—(1) திரு அன்பிலாலந்துறை (2) திருவியலூர் (3) திருஅழுந்தூர் (4) திருகடிக்குளம் (5) திருக்கொள்ளம்பூதூர் (6) திருஅவளிவணல்லூர் - இந்தக்ஷேத்திரங்களில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

சவுந்தரேசர்—திருப்பனையூரிலே சிவபெருமானுக்குவழங்குந்திருநாமம்.

சவும்—சிற்பநூல் முப்பத திரண்டனுளொன்று.

சவ்வியசாசி—அர்ச்சுனன் பெயர்களிலொன்று. இடக்கை வலக்கை யிரண்டாலும் அஸ்திரப் பிரயோகஞ் செய்வோ னென்பது பொருள்.

சஹதேவன்—(1) சுதாசன் மகன் இவன் மகன் சோமகன். (2) ஜராசந்தன் மகன். (3) பாண்டுபுத்திரரிலொருவன். அசுவினி தேவருளால்மாத்திரிவயிற்றிற்பிறந்தவன். இவன் மனைவி விஜயை.

சற்குணநாதர்—திரு இடும்பாவனத்தில் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

சனகன்—ஜனகன்.

சனமித்திரன்—புண்ணியராசன் மந்திரிகளி லொருவன். அரசன்புத்திரபீடிகையைத் தரிசித்தற்கு மணிபல்லவஞ் சென்றபொழுது நாகபுரத்தைப் பாதுகாத்து வந்தவன்

சனற்குமாரசங்கிதை—(1) சைவபுராணம் (2) ஸ்காந்தபுராணம்முதலிய புராணங்களி லொருசங்கிதை.

சனற்குமாரம்—உப புராணம் பதினெட்டனுளொன்று.

சனற்குமாரர்—பிரமமானச புத்திரரிலொருவர். மேருமலையில் நெடுங்காலந் தவமிருந்து சிவபெருமான் தரிசனங் கொடுக்கையில் யோகததி விருப்ப, நந்தி தேவர் சினந்து ஒட்டையாகுகவெனச்சபிக்க, அவ்வுருவேற்று வருந்திப் பிரமன்வேண்டுகோளால் நந்திதேவர் அருளபுரிய அவ்வுருவ நீங்கி நந்திதேவர்பா லுபதேசம் பெற்றவர்.

சஞ்ஜித்து—யதுகுலத்து ஹேஹயன் மகனாகிய குந்தியின் மகன். இவனுக்குச் சோபஞ்சி யென்றும்பெயர்.

சனந்தனர் — பிரமமானச புத்திரரிலொருவர்.

சனி } சூரியன் புத்திரன். நவக்கிரகங்களில் ஒருவன். இயமன்தம்பி.
சனீசுவரன் }

சனியூர்--திருமுனைப்பாடிநாட்டிலுள்ளதோரூர். பாரதக்கவிசெய்த வில்லிப்புத்தூராழ்வார் ஜனன பூமி - இவ்வூரிலேதான ரைபதி ஆட்கொண்டானென்னும் பிரபுவசித்தது.

சன்மதிமுனிவர்— சனகா புரியிலேயிருந்தவர். நன்னூலியற்றிய பவணந்திமுனிவர்பிதா.

சன்மிஷ்டை—விருஷபர்வன் மகன்.

சனுமுனிவர்—பாகீரதன்கொண்டுவந்த ஆகாயகங்கை தன்தவச்சாலைவழியே வந்தமையின் யாகமழியுமென்று அதனைப்பருகி, அவன் பலவாறுவேண்டிக்கொள்ள, காதுவழியேவிட்டு கங்கைக்குச் சாகவியெனப் பெயராக்கியவர்.

## சா

சாகடாயனம்— சகடாசாரி யெனும் புலவனியற்றிய வடநூல்.

சாகடாயனர்—ஓரிருடி. இருக்கு தங்

திரஞ்செய்தவர். இது சாமவேத லக்ஷணம்.

சாகரதத்தன்—விமலை பிதா. [சீவக]

சாகரன்—(1) சகரன் (2) சீவகன் றோழன். ஸ்ரீதத்தன் பிதா.

சாகர்—(1) சிந்து நதியின் மேற்கிலுள்ள சகதேசத்தவர் (2) ஒருநகரம்

சாகல்லியம்—மத்திரதேசத்தின் தலைநகரம்.

சாகல்லியன்—(1) ஒரிருடி. திருதராட்டிரன் வனவாசஞ் செய்தபொழுது தத்துவோபதேசஞ்செய்தவர் (2) ஒரிருடி. வேதமித்திரன் சீஷனாகிய சௌபரிபுத்திரன். இவன் இருக்வேதசாகைகளை ஐவகைப்படுத்தி வாற்சியன்மௌற்கலியன் சாலியன் கோமுகன் சிசிரனென்னும் ஐந்துசீஷர்க்கும் உபதேசித்தவன் (3) இருக்வேதத்தைச் சங்கிதைகளாகச் செய்தமுனி. (4) மனக்களிப்புடன்ஒன்பதினாயிரவருடம்மானசிகமாகச் சிவபூசை செய்து கிரந்தகர்த்தாவாகவும் தன்வமிசத்தில் ஸூத்ர கர்த்தாவாக ஸாவர்ணியென்போன் பிறப்பானென்றும் வரம்பெற்றவன். [லைசகபு]

சாகுந்தலம்—ஒருசமஸ்கிருதநாடகம். இது காளிதாசகவியாற் செய்யப்பட்டது. இது சகுந்தலையின் சரிதையைக் கூறுவதும், வடமொழி நாடகங்களிலே சிருங்கார ரசமலிந்த மதுரமானதுமாம்.

சாகேதபுரி—அயோத்தி. இக்ஷ்வாகு வமிசத்தரசர் அரசுபுரிந்தவிடம்.

சாக்கியநாயனார்—அறுபான் மும்மை நாயன்மாருளொருவர். திருச்சங்கமங்கையில் வேளாண் குலத் துதித்து, காஞ்சிநகரையடைந்து பௌத்தராகி அம்மதநூல்களை யாராய்ந்து அச்சமயப் பற்றின்றிச் சைவசமயமே மெய்ச்சமயமென் றுணர்ந்து அப்பௌத்தகோலத்திலேயே நின்று வெள்ளிடையிலிருந்த ஒரு சிவலிங்கத்திற்குக் கல் லெறிதலையே அர்ச்சனையாகக் கொண்டுமுத்தியடைந்த சிவபக்தர்.

சாக்கியமுனி—இக்ஷ்வாகுவமிசத்துப் பிருகத்பலன் குலத்தி லுதித்தவன். கோதமன் புத்திரனுசலின் கௌதமனென்றும் பெய ருடையவன். இவன் மரபிலே தான்புத்தர் அவதரித்தனர். இதனாலேயே புத்தருக்குச் சாக்கியமுனி, சாக்கியசிங்கம், சாக்கியன், கௌதமபுத்தன் முதலிய பெயர்கள் வழங்கும்.

சாக்கையன்—பறையூரிலிருந்த ஓரந்தணன் [சிலப்]

சாக்தேயர்—வாமதந்திரத்தின் வயப்பட்டுச் சக்தியை வழிபடுஞ் சமயத்தினர் யாவுஞ்சத்திமய மென்பதும் தர்மாதிசதுர்விதபுருஷார்த்தங்களையுஞ் சத்தியே தருமென்பதும் அவர்கள் கொள்கை. வாமிக ளெனவும்படுவர்.

சாக்ஷிக்கிணறு—மதுரையில் இலிங்கமும் வன்னியுங்கிணறும் சாக்ஷியாக வந்தவற்றுளொன்று.

சாக்ஷிநாயகர்—திரு அவணிவணல்லூரில் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

சாக்ஷிவரதர்— திருப்புறம் பயத்தில் சிவபிரானுக்கு வழங்குந்திருநாமம்.

சாக்ஷுஷன்—ஒருமநு. விசுவகர்மாவின் புத்திரன். [பாகவத]

சாங்கரிபீடம்—சத்தி பீடங்கள் அறுபத்து நான்கனு ளொன்று. இது

மகாகாளத்திலுள்ளது.

சாங்காசியபுரி—இக்ஷுமதி தீரத்திலுள்ள தொருநகரம். இது குசத்துவஜன் இராஜதானி.

சாங்கியம்—யோகமார்க்கத்தை யுணர்த்துவதொருநூல். அது சேச்சுவர சாங்கியம் நிரீச்சுவர சாங்கியமென இருவகைப்படும். அவற்றுள், சேச்சுவரசாங்கியம் அத்துவிதமதாநுஷ்டானங்கூறும். நிரீச்சுவர சாங்கியம் கபிலமதஸ்தர்களது சாங்கியம் ஷண்மதங்க ளுள்ளே யொன்றாகிய சாங்கியம கபிலராற் செய்யப்பட்டது. வேதாந்தத்திற்குஞ் சாங்கியத்திற்கும், பரமான்மாவை விட மற்றொன்று மில்லை யென்பதும், ஆன்மாவும் வேறு மற்றைத் தத்துவங்களும் வேறு என்னுங் கொள்கையே வித்தியாசமாம்.

சாங்கியன்—புறச் சமயிகளி லொருவன். புமானாகிய சுத்த புருடன் அறியாமையால் பிரபஞ்ச மெல்லாந் தானெனவிரிந்து நிற்பனென்றும், விவேகஞானத்தால் அவையெல்லாம் பிரகிருதிக்கே யன்றித் தனக்கில்லை யென்றுஞ் சொல்லுஞ் சமயவான்.

சாங்கியாயன்—ஓரிருடி. இருக்குவேதாத்தியாபகன்.

சாசுவதன்— இக்ஷுவாகு வமிசத்துப் பிரசன் மகன். இவன் விசுவகந்தன் என்றும் விசுவகன் என்றும் பெயருடையவன்.

சாணக்கியன்—சந்திரகுப்தன் மந்திரி. அஞ்சுலனிர்காண்க. இது அவனுக்குநாமாந்தரம்.

சாணூரன்—ஓரரக்கன். கம்சன் ஆதனாகியஒருமல்லன். கம்சனேவலாற் கண்ணனைக் கொல்லப் போர்தொடங்கிக் கண்ணனாற் கொல்லப்பட்டவன்.

சாண்டகைபீடம் — சத்தி பீடங்கள் அறுபத்துநான்கனுளொன்று. இது மண்டலேசத்திலுள்ளது.

சாணடிலி—(1) ரிக்ஷகிரியில் தவஞ்செய்த அந்தணமாது. (2) பிரசாபதி மனைவி. அக்கினிப் பெயருடைய வசுவைப்பெற்றவள் (3) அக்கினி தேவன் குமாரி. இமாசலகுகையில் வசித்துக்கொண்டு தவஞ்செய்த அதிரூபவதி அவளைக் கருடன் கண்டு மோகித்துச் சுவர்க்கங் கொண்டு செல்லக்கருதிப்பலவாறு வேண்ட, "உன்சிறகுகளுதிர" எனச்சபித்து, மீண்டும் அவன் வேண்டுகோளால் தயையோடு சிறகுகளுளதாக அருள்செய்து, அவனாற் பலவாறு துதிக்கப் பெற்ற மகா உத்தமி[சைவபு]

சாண்டில்லியன் — (1) ஒருஸ்மிருதி செய்தமுனிவர். இது அவர் பெயரால் வழங்கும் இவர் ஒரு கோத்திரத்தலைவர். (2, நந்தன்மரபிலுதித்த சந்திரகுப்தனுக்கு ராச்சியம் வரும்படி செய்த ஓரந்தணன். (3) ஒரு தமிழ்ப்புலவர். இவர் செய்தநூல் சிலப்பதிகாரவுரையில் மேற்கோளாக எடுத்தாளப்பட்டது.

சாதகம்—ஒருபக்ஷி. இது மழைத்துளியைப்பருகுவது.

சாதுசக்கரன்—ஆகாயகமனமுடைய ஒருமுனிவன். தன் முற்பிறப்பில் இவனை யொருபொழு துண்பித்த புண்ணியமே மணிமேகலை நல்வழி படுதற்கேதுவாயது.

சாதுவன் — ஆதிரையின் கணவன்

காகர்களுக்கும் அவர்கள் குருமக னுக்கும் சிலநீதிகள்கூறிஅவர்களை நல்வழிப்படுத்தியவன். [மணி]

சாத்தகி—வசுதேவன்மகன். சததிய கை யென்பவளிடம் பிறந்தவன், கிருஷ்ணன் தம்பி. தருமனுக்காகப் போர்செய்தவன்.

சாத்தக்கையார்—கண்ணஞ்சேந்தனார் பிதா. இவராற் பாட்டப்பட்டோன் தக்துமாறன்.

சாத்தனார்—ஐம்பெருங்காப்பியங்களி லொன்றாகிய மணிமேகலை யெனு நூலாசிரியர். சிலப்பதிகார நூலா சிரியராகிய இளங்கோவடிகளை கா லத்தினர். கண்ணகி மதுரையை யழித்தது முதலியவற்றைச் செங் குட்டுவனுக்கும் இளங்கோ வடிக ளுக்குஞ் சொல்லியவர். இவரைச் சாத்தனு ரென்றும், (பிறர்நூற் பிழைகளைக் காணுந்தோறும் தலை யிற்குட்டிக்கொண்டு தாமேவருந் துதல்பற்றிச்) சீத்தலைச் சாத்தனு ரென்றும், தமிழாசா னென்றும், மதுரைக்கூலவாணிகன் சாத்தனு ரென்றும் கூறுவர். திருவள்ளுவர் திருக்குறளரங்கேற்றுகையில் சங் கத்திலிருந்து ஒருகவியுங் கொடுத் தவர். இவரைத் தானிய வணிக ரென்ப.

சாத்தன்—(1) தொண்ணூற்றறுவகை ச்சமயசாத்திரங்களையும் பழகிமகா சாத்திரனெனச் சிறப்புப் பெயரே ற்ற ஒருமகான். (2) தேவந்தி கண வன். [சிலப்]

சாத்தா—ஐயனார். அரியர புத்திரன். சிவபெருமானுக்கும் மோகினிவடி வேற்ற அரிக்கும்பிறந்தவர். சூரனு க்குப்பயந்த இந்திரன் தன்மனைவி

யை இவர்வசமாகத்தான் ஒப்புவித் திருந்தனன்.

சாத்திகம—சிற்பநூல் முப்பத்திரண் டனுளொன்று.

சாதியகி— யதுமரபினன். சத்திய கன்மகனுகிய யுயுதானன்.

சாத்தியர்—தேவசாதியர் பதினெண் வகையினருள் ஒருசாரார். தருமன் புத்திரர். அவர் தொகையாற் பன் னிருவர்.

சாத்தியை—தருமன் மனைவியரிலொ ருத்தி, சாத்தியரையீன்றவள்.

சாத்துவதன் — (1) விஷ்ணுபரிசாரி லொருவன். (2) விதர்ப்ப னிரண் டாம்புதல்வனுன கிருதன் மரபிற் பிறந்தவன். இவனுக்குப் புத்திரர் எழுவர்.

சாத்துவதி—சுருதசிரவையிற்காண்க.

சாநவி—கங்கை. சன்னு முனிவரது செவிவழிவந்தமையின் இப்பெயர் பெற்றனள்.

சாந்தலிங்கசுவாமிகள்—சமய சாத்திர வாராய்ச்சி பெற்று இளமையிலே யேதுறவியாய் துறையூரில் வசித் திருந்த வீரசைவர். வைராக்கிய சத கம் வைராக்கியதீபம் அவிரோத வுந்தியார் கொலைமறுத்த லெனு நூல்களியற்றியவர்.

சாந்தி—(1) அஜமீடன் பௌத்திரன். நீலன் புத்திரன். (2) தேவகன் மகள். வசுதேவன்மனைவி. (3) ஜை னமதஸ்தாபகரான இருபத்து நா ன்கு தீர்த்தங்காரில் பதினாறாவதா கத் தோன்றியவர்.

சாந்திபர்—ஒரு முனிவர். அவந்தியி லிருந்தவர். கிருஷ்ணபலராமர்க்கு வித்தியாகுருவாயிருந்து அவர்கள் வித்தை கற்றவிடை பெறுவதற்கு

முன் யாது குருகாணிக்கை விரும்புகிறீரெனவினவ, தம்மனேவியுடன் ஆலோசித்து, சிலகாலத்திற்குமுன் முதலைவாய்ப் பட்டபிள்ளையைவருவித்துக் கொடுக்க வெனக் கேட்க, கண்ணன் தன் அண்ண னுடன் தேரேறிக் கடலிற்சென்று முழுக்கிப் பாஞ்சஜனனைச் சங்கரித்து அவன் பாலிருந்தபாஞ்சஜன்யத்தைக்கைக் கொண்டு யமலோகஞ்சென்று சங்கினைப்பூரித்து யமனால் அச்சிறுவனைப்பெற்று வந்து காணிக்கையாகக்கொடுக்கப் பெற்றவர்.

சாந்திராயணம்—சந்திரசம்பந்தமான ஒருவிரதம். இது அமாவாசைமுதல் பூரணைவரையில் நாளுக்கொருகவளமுயர்த்தியும், பூரணைமுதல் அமாவாசைவரையில் நாளுக்கொருகவளங்குறைத்தும் புசித்து அநுஷ்டிக்கத்தக்கது. இது பிராயச் சித்தாங்கமாக முப்பது நாட்களிற் செய்யக்கூடியது.

சாந்தை—உரோமபாதன் வளர்த்தபுத்திரி. தசரதன்புத்திரி. இருசியசிருங்கர்மனைவி. இவளுக்குக் காந்தையென்றும் பெயர்.

சாந்தோக்கியம் — அஷ்டோத்தர சதோபநிஷத்துகளிலொன்று. அதிரகசியமான தகரவித்தையிதிற்கூறப்பட்டுளது.

சாபஸ்தி—சபஸ்தனென்பவனால் நிர்மிக்கப்பட்ட நகரம். இது வங்களதேசத்திலுள்ளது.

சாமந்தநாராயணசதுர்வேதிமங்கலம்—கருணாகரத்தொண்டைமானால் நிர்மிக்கப்பட்டு வியாக்கியாதாக்களாயிருந்த நூற்றுறு சதுர்வேதி பட்டர்களுக்கு விருத்திகளா உண்டு செய்வித்த ஒருநகரம்.

சாமந்தநாராயணத்தொண்டைமான்—ஒருசிற்றரசன்.

சாமந்தநாராயணவிண்ணகரம் — கருணாகரத்தொண்டைமானால் பிரதிஷ்டைசெய்யப்பட்ட ஒருவிஷ்ணு கோயில்.

சாமுண்டி—(1) காளி (2) விந்தியபர்வதவாசியாகிய பராசத்தி.

சாமுண்டிதேவநாயகர்— புறப்பொருள் வெண்பாமாலையின் உரையாசிரியர். இவருக்குமாகலூர்க்கிழார் என்றும்பெயருண்டு.

சாம்பவதி—கண்ணன்பாரியை. சாம்பவந்தன்மகள் சாம்பனைப்பெற்றவள்.

சாம்பன்—(1) சிவன் (2) கண்ணனுக்கு ஜாம்பவதியிடம் பிறந்தகுமாரன்.

சாம்புநதேவிபீடம்—சத்தி பீடங்கள் அறுபத்துநான்கனுளொன்று இது ஸ்ரீநகரத்திலுளளது.

சாயலன்—காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த ஒருவணிகன். இவன் எட்டிப்பட்டம் பெற்றவன்.

சாயனசாரியர்—மாதவாசாரியர்சகோதரர். சிலர் மாதவாசாரி யருக்கே நாமாந்தரமென்றுஞ் சொல்லுவர். வித்தியாரணியரிற்காண்க.

சாயனை—குருதேவியிடத்திற் பிறந்த புத்திரன்.

சாயாதேவி--சூரியன்மனைவி. சாவணி, சனி; பத்திரையென்பாலை இவரைப் பெற்றவள். சஞ்ஞிகையிற்காண்க.

சாயாவனேசர்—திருச்சாய்க் காட்டிலேசிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

சாரகுமாரன் — இவனுக்குச் சயந்தகுமாரனென்றும் பெய ருண்டு. இவன் இசையுணரும்படி சிகண்டி

யாசிரியரால் இசைநுணுக்கமெனு நூல் செய்யப்பட்டது.

சார்ங்கதரன் — (1) விஷ்ணு. (2) ஓரரசன்குமாரன். தன்நண்பனோடு விளையாடிக்கொண்டிருந்த பொழுது விடுத்த புறவொன்று தன் சிற்றன்னை மாளிகையிலிறங்க, நண்பன் தடுப்பவுங் கேளாது, அதனை வாங்கிச்செல்லக்கருதி அங்கடைய, அவனைச் சிற்றன்னை காமுற்றுப் பலாத்காரப் படுத்த, உடன்படாது தப்பி யோடினமையின், அவள் தன் கணவனுடன் சாரங்கதரன் தன்னைப்பலவந்தமாகப் புணரவந்தானென்றும் தான் அதற்குத்தப்பியிருக்கின்றனளென்றுங் கூறஅவன் பிதாசிந்திக்காது அவனைக் கைகால்கள் வெட்டும்படி கட்டளைகொடுப்ப, கொலையாளிகள் அங்ஙனமே செய்துவிடப்பின் சிவகடாக்ஷத்தால் அவைவளரப்பெற்று, மச்சமுனிவருபதேசமேற்றுத் தவஞ்செய்து முத்தியடைந்தவன்.

சாரங்கபாணி— விஷ்ணு [சாரங்கத்தைக்கையிலுடையவன்.]

சாரங்கம்— (1) விஷ்ணுவின் வில். [கொம்பாற் செய்யப் பட்டது.] (2) ஒருவகை நரப்புக்கருவி.

சாரங்கன்—விஷ்ணு.[பலவர்ணமான திருமேனி யுடையவன்.]

சாரசுவதம்—(1)ஒருதேசம். சரசுவதிநதி தீரத்திலுள்ளது. (2) வடமொழி வியாகரணம், இது சந்திகளை நன்குணர்த்துவதாம்.

சாரசுவதர்—சாரசுவத தேசத்தினர். பஞ்சகௌடர்களிலொருபாலார்.

சாரசுவன்— விருக்ஷியென்பவன். ததிமுனிவர் வீரியத்தினாலே சரசுவதி நதியிலுதித்தவன்.

சாரணர்— பதினெட்டுத் தேவஜாதியரி லொருசாரார். இவர்கள் பாடுவோர்.

சாரணன் — (1) வசுதேவனுக்கு ரோகிணியிடம் பிறந்தபுத்திரன். (2) இராவணன் அநுசரர்களிலொருவன்.

சாரதாபீடம் — சத்திபீடங்கள் அறுபத்துநான்கனுளொன்று. இது ஸ்ரீகிரியிலுள்ளது.

சாரமாமுனி — சிவபெருமானுக்குப் புஷ்பத்தொண்டு செய்துவந்தவர். ஒருகாலத்தில் பராந்தகச் சோழன் அத்திருத் தொண்டிற் கிடையூறு செய்ய அவனது நாட்டை மண்மாரியாலழித்தவர்.

சாரமேயன்—யதுவமிசத்து அக்ரூரன் தம்பி.

சாரிபுத்தன்—திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகளை யெதிர்த்த ஒரு பௌத்தன். இவன் தலையிலிடி விழுந்திறந்தவன்.

சாரீபுத்திரன் — புத்தசிஷ்யர்பதின்மரிலொருவன்.

சாரு } மனசியன் புத்திரன்.
சாருவரன் } பூருமரபினன்.

சார்ங்கதரன் —(1) சங்கீதசாஸ்திரஞ்செய்த ஒரு வடமொழிப்புலவன். (2) திருமால்.

சார்ங்கபாணி—திருமால்.

சார்ங்கம்—(1) சாரங்கம். திருமால் வில் (2) ஓர் நரப்புக்கருவி.

சார்ங்கவன் — கோதமையின் புத்திரன். இவன் மயானத்திற் பேய்மகளாடியதைக் கண்டு உயிர்நீங்கியவன் [மணி.]

சார்ங்கிகர்—மந்தபாலன்மக்கள். இவர்

நால்வர். காண்டவதகன காலத்திற் காக்கப்பட்டவர்.

சார்த்தூல ஹர மூர்த்தி — அறுபத்து நாலு சிவமூர்த்தங்களிலொன்று. தாருகவனத் திரீடையால் மனவருத்தமுற்ற முனிவர் அபிசாரவேள்வியிலுதித்து அவர்களாற் செலுத்தப்பட்ட சார்த்தூலத்தை (புலியை) உரித்துடுத்து ஹதஞ்செய்த அவசரம்.

சார்த்தூலன்—(1) இராக்கதன், இராவணன் பரிவாரத்தாரில் ஒருவன் (2) பிரசாபதி படைவீரரிலொருவன் [சூளா.]

சார்வபூமம்—வடதிசைக் காவல்பூண்டயானை.

சார்வபௌமன—வித்தியாதரநாயகன்.

சார்வாகம்—இந்திரிய கோசரமாகும் விஷயங்களையன்றி வேறுபொருளில்லையெனப் பிரதிபாதிக்கும் மதம். இது நாஸ்திகம். இம்மதத்தினர் சைதன்னியரெனப் பெறுவோர்.

சார்வாகன் — (1) துரியோதனனுக்கு நேயமாயிருந்த ஓரசுரன். இவன் தருமனுக்குப் பட்டாபிடேக நிகழ்கையில் அதனைத் தடுக்க இருடிவேடமுற்றுச் சென்று, அங்கிருந்த இருடிகளால் சாம்பராக்கப்பட்டவன். (2) பூதமே தெய்வமெனனுஞ் சார்வாக மதத்தினன்.

சாலகடங்கடர்—சாலகடங்கடையின் வழியில் ஜனித்தவர்கள்.

சாலகடங்கடை — வித்யுத்கேசன் மனைவி. சுகேசன் தாய். இவள் வழியிலுண்டானவர்கள் சாலகடங்கடரெனப் பட்டார்கள்.

சாலக்கிராமம்— (1) கண்டகிநதியுற்பத்தியிடத்திலுள்ள ஒருபுண்ணியஸ்தலம். (2) விஷ்ணுமூர்த்தியை பொசித்த பூஜார்ஹமான ஒருவகைச்சிலை இச்சாலக்கிராமம் நிலத்திற்படுதலும் நீரிற்படுவதுமென இருவகைப்பட்டு ஜலஜம் ஸ்தலஜமெனப் பெயர்பெறும். இமயமலைக் கருகிலுள்ளது.

சாலபோதகன் — ஒரு நாகராஜன். நந்தைபிதர்.

சாலி—ஒரு பார்ப்பனி. அபஞ்சிகன் மனைவி. ஆபுத்திரன் தாய்

சாலிஹோத்திரன — (1) இடும்பன் வனத்தருகே ஆச்சிரமங்கொண்டிருந்த ஒரு முனிவர். பாண்டவர் அரக்குமாளிகையினின்று தப்பிச் சென்று இவர்பால்வந்து உபசரிக்கப்பெற்றனர் (2) சாமவேதாத்தியயனஞ்செய்த ஒரிருடி. (3) அசுவசாஸ்திரஞ்செய்த ஆசிரியர்.

சாலிவாகனன் —விக்கிரமார்க்கனைப் போரில்வென்றதொன்றவன். தன்பெயராற் சாலிசக வருடமெனக் கண்டவன். அசுவசாத்திரம் அலங்காரசாத்திரம் நவரத்தினசாத்திரமியற்றியவன்.

சுசோசனனெனும் வேதியன் மகளாய சுமித்திரை யென்பாள் மணப்பருவமுற்றபொழுது, ஆதிசேடன் ஒரு மானுடவடிவுடன் ஆண்டடைய, அவனைக் கண்டு காமுற்றுக் கூடிப்பன்னாள் அவனுடன் பயின்று கருப்பவதியாகி 'ஐயோ! என்குலாசாரங் கெட்டேன்' என, அவன் மாற்கூற, ஆதிசேடன் 'பெண்ணே! என்னை மனிதனெனக் கருதற்க. ஆதிசேடனென்றறிக' என்று தன்சுயவடிவத்தைக்காட்டி, 'நின்பாலுதித்திடும்

புத்திரன் மகாப்பிரபல மன்னவனாவன. அவனாலே உனதுகுலஞ் சிறப்புறும்' என்று மறைந்துவிட, சுமித்திரை இவ்வரலாற்றினைப் பிதாவுக்கறிவிப்ப, அவன் யாவுந் தைவிகமென்று திருப்தியுற்றிருந்தனன். சுமித்திரை சோரப்புணர்ச்சியாற் கருவுற்றமையை யுணர்ந்த பிரஜைகள் மன்னனுக்குணர்த்த, மன்னன் சுசீலாசனனை யழைத்து 'அந்தணா! உன்குமாரியைநகர்கடக்க ஒட்டிவிடு' எனக கட்டளையிட, அவள் அருகுள்ள ஒரு குயவன் வீட்டில் ஆதரிக்கப்பட்டுவசித்துச் சரியானகாலத்தில் ஒரு புத்திரனைப் பெற்றனள். அப புதகிரனுக்குத் தான் சாலிவாகன னெனபது பெயர்.

இவன்ஐயாட்டைப்பருவத்தனாய் அச்சேரியிலுள்ள குயவர் குலச்சிறுருடன் விளையாடுவானாய் ஒரு நாள் தான் அரசனாகவும் ஏனையோர் மந்திரி பிரதானி குடிகள் முதலியோராகவும் பாவித்து விளையாடக்கண்ட குயவன் சந்தோஷித்து, மண்ணாலேயே யானை சேனை முதலிய பரிவாரங்களும் கிரீடம சிங்காசன முதலியனவுஞ் செய்து கொடுத்தனன். இப்படியே நாடோறும் அரசுரிமை விடயமாகவே விளையாடி வருகையில், அதைக்கண்ட அந்தணனொருவன் அரசனாக விளங்கும் இவன்முன் பஞ்சாங்கம்படிக்க, தன்னருகிலிருந்த மந்திரியானவனைக் கண்டு ஒருகுடங்கொடுக்கும்படி செய்ய, அந்தணன் அதனைக்கொண்டுசென்று மறுநாள் அதை வீட்டிற்குடமா யிருக்க அதனைப் பவர்க்கு மூனார்த் தினான்

அயலூரில் ஒருவணிகனிறக்கையில், தன்மக்கள் நால்வரையும் விளித்துக் "கட்டிலின் கால்கள் நான்கின் கீழும் புதைத்துள்ள திரவியத்தைப் பாகித்துக் கொள்வீர்களாக" எனக்கூற, அவனுக்குச் செய்யவேண்டியகடன்கள் முடிந்த பிறகு புதல்வர் நால்வரும் தந்தையின் சொற்படிசோதித்துப்பார்க்க, கால்களின் கீழிருந்தவைகள் கலன்களுள் ஒன்றில் மண்ணும், ஒன்றில் உமியும், ஒன்றில்பொன்னும், ஒன்றில் சாணமுமிருக்க ஒன்றுமுணராது, பல முதியோரிடஞ் சொல்லியும் விவரமேற்படாது, மன்னனாகிய விக்கிரமார்க்கனிடந் தெரிவிக்க, அவனும் மந்திரிகளோடு யோசித்தும தீர்மானிக்க முடியாது விடுப்ப, அவ்வணிகர் நல்வரும் திரும்பிவருகையில், சாலிவாகனனுணர்ந்து அந்தப்பைகளைக்காட்டினால் யான்தீர்மானஞ் சொல்கிறேன் என்று, அவற்றைப் பார்த்து, ஒருவன் நிலத்தையும் ஒருவன் தானியத்தையும், ஒருவன் ஆபரணங்களையும், ஒருவன்கால் நடைகளையும் பெறக்கடவனெனக் கூற, அவர்கள் நால்வரும் ஒப்புக் கொண்டு மகிழ்ந்து சிறுவனைப் புகழ்ந்து சென்றார்கள்.

இவற்றையெல்லாங் கேள்வியுற்ற விக்கிரமார்க்கன் தன்கீர்த்தி குறைவதைக் கருதிப் பொறாமையினால் அவனைக் கொல்லவேண்டுமென்று படையெடுத்துச் சென்ற பொழுது, சாலிவாகனன் தன்னுடி

டத்திருந்த யானை குதிரை சேனை முதலியன உயிர்பெறப் போர்க்கோலங்கொண்டுசென்று, வெற்றிகொண்டு நருமதைக்கரைவரையிலுள்ள தேயத்தைக்கைக்கொண்டு மன்னவனாகிச் சில காலத்தில் விக்கிரமார்க்கனைக் கொன்றனன். மைசூர் அரசர்கள் இவன் மரபினர். சாலிசகம் நருமதைக் கிக்கரையிலும் விக்கிரமார்க்க சகம் அக்கரையிலும் வழங்கும்.

சாலினி — வேட்டுவ மகளாகிய தேவராட்டி [சிலப்]

சாலீயன் — ஓரிருடி. சாகல்லியன் சீடன்.

சாலுவன் — சாளுவனிற்காண்க.

சால்மலி, சான்மலி — (1) சப்த தீவுகளிலொன்று. சுராக்கடலினிடையிலுள்ளது. இத்தீவில் குமுதம் உன்னதம் பலாஹம் துரோணம் சகங்கம் மகிஷம் ககுத்துமானெனுஞ் சப்தபர்வதங்களுள. (2) ஒரு நரகத்தின்பெயர். சால்மலியென்பதற்கு முள்ளிலவமரமென்பது பொருள். அந்நரகத்திலும்பிறரு ரையமணுதர்கள் அக்காட்டிற்புகுத்தித் துன்புசெய்வார்களாம்.

சாகலகம் — (1) ஒருநாடு இதன் தலைநகரம் நாகபுரம். இதில் தவளமலையெனு மொரு மலையுளது. இஃது ஆபுத்திரநாடென மணிமேகலை கூறும். (2) பதினெண்பாஷைகளிலொன்று.

சாகரி — பிராகிருத பாஷைகளில் சாமானியமான ஒன்று.

சாவர்ணி — (1) சாவணியென்றும் பெயருடையான். எட்டாவதுமநு சூரியன் புத்திரன். (2) ஒருபௌராணிகன்.

சாவர்ணை — சூரியன் பாரிகளிலொருத்தி. இவளே சாவர்ணியைப் பெற்றவள்.

சாவணி — எட்டாமமநு. சாவர்ணியென்றும் பெயருடையான்.

சாவித்திரி — (1) இருக்வேதத்தின் ஒரு பிரபலபாகம். (2) பார்வதி. (3) பிரமன்பாரிகளிலொருத்தி. (4) கசியபன் மனைவி (5) மகாபதிவிரதை, அசுவபதியின் புத்திரி. அசுவபதி தன்மகள் மணப்பருவமடைந்தபொழுது அவளை நோக்கி "நீ விரும்பிய கணவனை எனக்குணர்த்தின் விவாகஞ் செய்விப்பல்" என, சாவித்திரி யெங்குந்தேடி, வனத்தில்தனமனைவியோடுதவத்திலிருந்த சத்தியவானெனுமரசனைக் காமுற்றுத் தந்தைக்குணர்த்த, அருகிருந்த நாரதர் "அவன் ஓராண்டிலிறப்பனாகலின் வேறொருவனை வரிக்க" என, பதிவிரதை மனஞ்சலனமடையாமையின் அசுவபதி அங்ஙனமே மணமுடிப்ப, சின்னாட்பின்னை சாவித்திரிகணவனிடங்காட்டையடைந்து ஆபரணங்களை விலக்கித் தவக்கோலங் கொண்டு கணவன் ஆயுளைக் கருதித் தவஞ்செய்து வருடத்திற்கு மூன்றுநாளிருக்கையில், அம்மூன்று தினங்களும் அன்னாகாரமின்றிக் கடுந்தவம் புரிந்தனள். மூன்றுநாள் சத்தியவான் தன்வழக்கப்படி மரந்தறித்துக்களையினுல் சாவித்திரி மடியின்மேற் சாய்ந்து நித்திரை போகுகையில், இயமன் சத்தியவானுயிரைக் கவர்ந்து தென்றிசை நோக்கிநடப்ப, சாவித்திரிபின்றொடர, இயமன் 'என்னைத்தொடர்ந்த'

என, 'என் நாயகனைவிட்டுத் திரும்பேன்' அவன்பின்னேயே செல்வேன். என்று பின்செல்ல, இயமன் அவள்கற்பின் மேன்மைக்குக் களிகூர்ந்து சத்தியவானுயிரைவிடுத்து அஃதவனுடலிற் கூடிவாழச் செய்து வாழ்த்திப் போயினன். அவ்வாறுயிர்பெற்ற சத்தியவானுடன் சாவித்திரி தன்தந்தை வீட்டையடைந்து கணவனோடொற்றுமையாக நெடுங்காலம் சுமங்கலியாக விளங்கினள். இவள் பிரமன் கட்டளையையுங் கடக்க உத்தமியெனப் பிரசித்திபெற்றவள்.

சாவித்திரிநோன்பு—சுமங்கலிகளால் அநுஷ்டிக்கப்படுவதோர் விரதம். இது ஆனிமாச பூரணையன்றுசெய்வது வழக்கம். வைதவ்வியத்தை யொழிக்கும் ஆற்றலுடையதாம்.

சாளக்கிராமம்— விஷ்ணுஸ்தலங்களிலொன்று. இதுவடநாட்டிலுள்ளது. சாலக்கிராமத்திற்காணக.

சாளுவம் — ஒருநாடு, மத்தியதேசத்துள்ளது.

சாளுவன் — (1) சாலுவனென்றும் பெயருடையவன். சிசுபாலனுக்கிளவல். கண்ணன் உருக்குமணியைக் கவர்ந்து சென்றபொழுது சிசுபாலனைக்கொன்றதுகண்டு, சிவபெருமானை நோக்கித்தவஞ்செய்து சௌம்பகமெனும் விமானத்தையும் சிலசக்திகளையும்பெற்று ஆகாயத்திற் சஞ்சரித்து யாதவர்களைத் துன்புசெய்தவன். இறுதியிற் கண்ணனாற் கொல்லப்பட்டான். (2) யதுமரபினன். வசுதேவனுக்கிளவலாகிய விருகன்புத்திரர்களில்மூன்றுவதாக வுதித்தவன்.

## சி

சிகண்டி—(1) அக்கிர்த்தானன் மனைவியரில் ஜேஷ்டை. (2) துருபதன் மகன். பேடாகப்பிறந்தவன். யக்ஷனால் ஆணுரு வேற்றவன். ஆண்தன்மை யற்றவர்களை யெதிர்ப்பதில்லையென விரதங்கொண்டவீடுமனை யெதிர்த்தவன். அசுவத்தாமாவினாற் கொல்லப் பட்டவன். (3) இசைநுணுக்கமெனு நூலை யியற்றியவர். சாரகுமாரனுக்கு அதனைக் கொண்டு இசையுணர்த்தியவர்.

சிகி—புத்தர்களில் இருபத்து மூன்றுவதாகத் தோன்றியவர்.

சிக்கமாதையர்—மாதிராச னிடத்தில் மிக்க பக்திவாய்ந்தவர். தானிறந்து பட்டபொழுது மாதிராசனு லெழுப்பப்பட்டவர் [வசவபு]

சிக்ஷை—எழுத்தாராய்ச்சியைச் சொல்வது. இது நாரதர் முதலியோரார் செய்யப்பட்டு அவ்வவர் பெயரால்வழங்கும். பாணினி சிக்ஷை அருணசிக்ஷை பாரத்வாஜசிக்ஷை வியாசசிக்ஷை சர்வசம்மத சிக்ஷை சித்தாந்தசிக்ஷை முதற் பலசிக்ஷைகளுளவென்பர். [மணி]

சிங்ககேது—கனகபல்லவ ராசகுமாரன் [சூளா]

சிங்கபுரம்—கலிங்க நாட்டி லுள்ள ஒருநகரம். இஃது அரபுர மெனவும் வழங்கும். ஒருகாலத்தில் வசு அரசனாலாளப்பட்டது.

சிங்கமுகன் } சிங்கமுகாசுரன் } ஆயிரஞ்சிங்கத்தலைகளும் இரண்டாயிரங்கரங்களு முடைய ஓரசுரன். இவன் சூரபன்மனுக் கிளவல். கசியபர் மாயையைக் கூடிப்பெற்ற சூர

பன்மன் சிங்கமுகன் தாரகன் அஜமுகி யென்பவர்களி லொருவன். இவன்மனைவி விபுதையென்பாள். அதிசூரன் முதலாக நூறு புத்திரரைப் பெற்றவன். இவன் சூரபன்மனோடு கூடிப் பெருந் துன்பஞ் செய்து வந்தானெனினும் குமாரக் கடவுள் போர்புரிய வெழுந்தருளிய பொழுது சூரனுக்குப் பலவாறு புத்திகூறியவன். பேராற்றலுடையான். தமயன் தன்புத்தி கேளாமையின் சினந்துபோருக்குச் சென்று குமாரக்கடவுளாற் கொல்லப்பட்டவன். இவனிறந்தமைக் காகச் சூரபன்மன் துன்புற்றதற் கெல்லையில்லை.

சிங்கவன்மன்—இரணிய வன்மனிற் காண்க.

சிங்களம்—ஒருதீபம். இது இலங்கை ஈழம் சிம்ஹளமுதலிய பெயர்களையுடையது. (சிமஹளம் = இலவங்கப்பட்டை) இலவங்கப் பட்டையைமிகுதியாக வுடையது. இவ்விலங்கை இராவணன் காலத்தில் எழுநூறு யோசனை விஸ்தீரணமிருந்ததாகஇராமாயணத்தாலுணரப்படும். இதில் ஒரு சிறு கூறேயிப்போதுள்ளது. எஞ்சிய பாகத்தைக் கடல்கொண்டது. பலநூறு வருடங்கட்கு முன் அங்குக் குடியேறிய ஆரியரும் பூர்வராக்ஷஸமரபினரும் கூடிப்பிறந்தவர்களே இப்போது அங்கு வசிப்பவர்களென அங்குள்ளார் கூறுவர். அங்கு சிங்களபாஷையும் தமிழ்ப்பாஷையும் வழங்கும். ஒருகாலத்தில் பௌத்தமதம் மிக்குவிளங்கியவிடம். இலங்கையில் புத்த பீடிகையு மொன்றுண்டு.

சிங்கன்—(1) குமாரக் கடவுளுடன் போருக்குச்சென்ற பூத வீரர்களிலொருவன் (2) சிங்கமுகன். சூரன் தம்பி (3) கனகவிஜயற்குத் துணைவனான ஓரரசன் [சூளா]

சிங்கேசுவரி—திருப்புத்தூரிலேஉமாதேவியாருக்கு வழங்குந்திருநாமம்.

சிங்ஙிகை—தானவனான விப்பிரசித்தியின் மனைவி. இராகு கேதுக்களைப் பெற்றவள்.

சிசிரன்—சாகல்லியன் மாணவகன்.

சிசுநாகன்—வைசுநாகர்களின் கோத்திரத்தலைவன் மகதநாட்டுமன்னன்.

சிசுபாலன் — தமகோஷ னெனுஞ் சேதிநாட்டரசனுக்குமவசுதேவன் தங்கை சுருதசிரவைக்கும் பிறந்தவன். விஷ்ணுவின் துவாரபாலகர்களி லொருவன். பூர்வ ஜன்மங்களில் இரணியகசிபனும் இராவணனுமாக வந்தவன். இப் பிறப்பில் கண்ணனாற் கொல்லப் பட்டவன். இவன கொடுஞ்செயல்களைச் சிசுபாலவதமென மாககவி கூறியதில் காணலாம்

சிச்சிலி—சுயற்கெண்டையைக் கொத்திச்செல்வதோர்குருவி. இதனைச் சிலையென்றுங் கூறுப.

சிட்டினன்—அர்ச்சுனன. தனையும் தனவில்லையும் தன் தமயனையும் இகழ்ந்தோர் எத்தகையின ராயினும், அவர்தலையை நட்டப்படுத்தி நாசஞ்செய்வே னெனச் சபதங் கொண்டமையின் இப்பெய ரேற்றவன்.

சிதத்தவஜன்—மிதிலாநகரத்து அஜனமைந்தன்.

சிதம்பரசுவாமிகள்—வித்வான் சிதம்

பரப்பிள்ளை யென்றும், சிதம்பர
கவிராய ரென்றுஞ் சொல்லப்பட்
டவர். இவர் வீரசைவர் குமாரதே
வர் சீடர். மதுரைமீனாக்ஷி தேவியா
ரையுபாசித்தவர். பின்னர், தேவி
கட்டளையால், தொண்டை நாட்
டில் திருப்போரூ ரென்றும் சமர
புரியென்றும் பிரசித்தமாக விளங்
கும் சுப்பிரமணிய க்ஷேத்திரத்தை
யடைந்து, புற்றிடங்கொண்டுமறை
ந்திருந்த முருகவேள் திருவுருவைக்
கண்டு ஆலயநிர்மாணஞ் செய்துபிர
சித்திபடுத்தியவர். தம்பேராசிரிய
ராகிய சாந்தலிங்க சுவாமிக ளியற்
றிய வைராக்கிய சதகமுதலிய நா
ன்குநூல் கட்கும், கண்ணுடைய
வள்ளலாரியற்றிய ஒழிவி லொடுக்
கத்திற்கும் மிகச்சிறந்த உரைசெய்
தவர். திருப்போரூர்ச்சந்நிதிமுறை
திருக்கழுகுன்ற வேதகிரீசர்பதிக
முதலியன பாடியவர். திருப்போ
ரூரில் ஒரு திருமடங்கண்டவர்.

**சிதம்பரம்**—சோணாட்டில் காவிரிவட
கரையி லுள்ள ஒரு சிவஸ்தலம்.
பூலோக கைலாசமென்றும், பஞ்ச
லிங்கஸ்தலங்களில் ஆகாய லிங்க
ஸ்தலமென்றும், நிருத்த க்ஷேத்திர
பஞ்ச சபைகளில் பொன்னம்பல
க்ஷேத்திரமென்றுஞ்சொல்லப்படும்
இந்த க்ஷேத்திரந் தரிசித்தவர்கட்கு
முத்தி யளிப்பது. இதன் மகிமை
யைக்கூறுவன சிதம்பர புராணம்
கோயில் புராணம் புலியூர் புரா
ணம் சிதம்பர மான்மியம் ஏமச
மான்மியமெனு நூல்கள். வியாக்
கிரபாதமுனிவர் பதஞ்சலிமுனிவர்
முதலிய அநேகர்க்குத் திருவருள்
புரிந்த க்ஷேத்திரம். திருநீலகண்ட
நாயனார் இளமையானதும், தன்
மதன் துச்சகன் முதலிய தீயோர்
களும் புலையர்மூவரும் முத்திபெற்
றதும், சிங்கவன்மச் சக்கரவர்த்தி
மேனிக்குட்டநீங்கி இரணியவன்ம
னானதும், களைத்த வேதியன்வாயி
ல்ஒருசாத்திரத்தை வீழ்த்தியகாகமும்
எருவை யுண்ண விறந்த கயலும்
முத்திபெற்றதும், உபமன்யு முனி
வர்க்குப் பாற்கடலளித்ததும் இந்த
க்ஷேத்திரமே. இதனைப் புண்டரீக
வீடு என்பர். அது ஞானவிடயமாத
லின் இங்கு விளக்கத்தக்க தன்று.
இதன் மகிமை நூல்களா லுணர்க.
சபாபதியும் சிவகாமி யம்மையும்,
திருமூலநாதரும் உமையம்மையும்
எழுந்தருளியவர். மூவர்பாடலும்
பெற்றது. சிவகங்கை முதலிய
பத்துத் தீர்த்தங்களையுடையது.

இந்த க்ஷேத்திரத்திலே சபாபதி
சந்நிதியிலேயே கோவிந்த ராசரெ
னும் பெயரால் விளங்குந் திருமால்
கோயிலுமுண்டு.

**சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார்**—
சிவயோகத் திருந்து திருவடியை
யடையும் ஜீவன்முக்தர்கள், ஒன்
பது தொகையடியாரில் ஒருபகு
ப்பினர்.

**சித்தநாதேசர்**—திருநறையூரில் சிவ
பிரானுக்கு வழங்குந்திருநாமம்.

**சித்தம்**—சிவாகமங்கள் இருபத்தெட்
டனு ளொன்று. இது சிவபிரான்
திருநெற்றியும், நான்கு உபபேதங்
களும், ஒன்றரைகோடி கிரந்தமு
மாகவுள்ளது.

**சித்தராமையர்**—மல்லிகார்ச்சுன லிங்
கம்போலச் சொன்னலாபுரத்தி
லும் பிரதிட்டைசெய்து, வையதி

ணுயிரஞ் சிவாலயங்களைக் கட்டு வித்து, நெற்றிக்கண் பெற்று நா டோறுங் கைலாயஞ்சென்று தரி சித்துவந்த வீரசைவர்.

சித்தர்—தேவசாதியர் பதினெண்மரி லொருபகுப்பினர்.

சித்தர்கள்—அணிமாமுதலிய அஷ்ட சித்தி களிலும் வல்லவர். இவர்க ளின் தொகைக்குக் கணக்கின்று. ஆயினும் கோரக்கர் முதலிய நவ நாத சித்தர்களும், கொங்கணர்முத லிய அஷ்டாதசசித்தர்களுமே சிற ப்பாகச் சொல்லப் படுவர். இவர்க ளாற் செய்யப்பட்ட பல நூல்கள் இறந்திருக்கவேண்டும். அகப்பேய் என மனத்தை விளித்துப் பாடிய அகப்பேய்ச்சித்தரும், பாம்பேஎன மனத்தைக் கூறிய பாம்பாட்டிச் சித்தரும், கடுவெளிசித்தரு முதலி யோர் நூல்கள் சிலகாணப்படும்.

சித்தவடம்—சுந்தரமூர்த்தி சுவாமிக ளுக்குச் சிவபெருமான் திருவடி தீக்ஷை செய்த இடம்.

சித்தாசிரமம்—விசுவாமித்திரர்தவஞ் செய்தவிடம். அம்முனிவர் இங் குச் செய்த யாகத்தைக் காப்பதற் காகவே தசரதராமனைக் குழந்தை ப்பருவத்திற்கொண்டு சென்றனர். இங்கே தவமுதலியன ஆசிரயித் தோர் சித்தியைப்பெறுவது உண் மையாகலின் இப்பெயர் பெற்றது.

சித்தாந்தகௌமுதி—பாணினி முனி வர்செய்த வடமொழி வியாகரண த்திற் கொரு வியாக்கியானம்.

சித்தாந்தசாத்திரம்—இதுபதினான்கு. அவற்றின்பெயர்களை "உந்தி களி றேயுயர்போதஞ் சித்தியார், பிந்தி ருபா வுண்மைப பிரகாசம்—வந்த வருட், பண்புவினாபோற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு, வுண்மை நெறி சங்கற்ப முற்று" என்னும் வெண்பாவானறிக. இவற்றுள, திரு வருட்பயன் சங்கற்ப நிராகரணம் வினாவெண்பா கொடிக்கவி போற் றிப்பஃறொடை சிவப் பிரகாசம் நெஞ்சுவிடுதூது உண்மை நெறி விளக்க மெனுமெட்டும் உமாபதி சிவாசாரியராலும், உண்மைவிளக் கம் திருவதிகை மனவாசகங் கடந் தாராலும், சிவஞான சித்தியார் இருபா விருபஃதெனு மிரண்டும் அருணந்தி சிவாசாரியராலும்,சிவ ஞானபோதம் மெய்கண்ட தேவ ராலும், திருவுந்தியார் திருவியலூர் உய்யவந்த தேவநாயனாராலும், திருக்களிற்றுப் படியார் திருக்கட வூர் உய்யவந்த தேவநாயனாராலும் இயற்றப்பட்டன. இவ்வுய்ய வந்த தேவநாயனாரிருவரில் திருக்களிற் றுப்படியார் செய்தவர் முற்பட்ட வரும், மற்றை யோருக்கு ஆசிரி யருமாம்.

மேலைய ஆசிரியருள், மெய்கண் டதேவர் சீடா அருணந்தி சிவாசா ரியர்; அவர் சீடர் மறைஞானதேசி கர்; அவர் சீடர் கொற்றவன குடி உமாபதி சிவாசாரியர். இவர்கள் நால்வரும் சந்தான குரவர்களென ப்படுவர். உமாபதி சிவாசாரியர் தாமியற்றிய சங்கற்ப நிராகரண மெனுநூலில் சாலிவாகனவருஷம் கஉசுகூ—ல் அந்நூலைச் செய்த தா கக் கூறியுளர்.

மேற்காட்டிய சித்தாந்த சாத்தி ரங்கள் பதினான்கும் சிவாகமங்க ளின் ஞானகாண்டப் பொருளைச்

சுருக்கித் தெள்ளிதின் விளக்கவல்ல நூல்களாயிலகுகின்றன. இவற்றை மெய்கண்ட சாத்திரமெனவும் வழங்குப. இவையேயன்றி அந்த ஞானகாண்டப் பொருளை தமிழில் விளக்கு நூல்கள் சைவசமயகுரவர்கள் நால்வரருளிய தேவார திருவாசகங்கள். இதனை, "மாவாய்மைச் சம்பந்தர் வாக்கரசர் வன்றொண்டர் வாதவூரர், பூவாயின் றேறலெனுந் தமிழ்மறையாந் திருக்கடைக்காப் புகழ்சேர் சாலுந், தேவாரந் திருப்பாட்டுத் திருவாசகமுமுறையாற் செப்புகின்ற, நாவாயே நாவாயாம் பவக்கடலைக் கடந்துமுத்தி நகர்சேர் தற்கே" என்னுஞ்செய்யுளானறிக.

சித்தாந்தசாராவளி — சரியை முதலிய நான்கு பாதங்களையும் விளக்கும் அரியதொருநூல். திரிலோசன சிவாசாரியரருளியது.

சித்தாந்தசிகாமணி — துறைமங்கலம் வித்வான் சிவப்பிரகாச சுவாமிகளியற்றிய நூல்களிலொன்று.

சித்தாந்தத்தொகை — புத்தமத சித்தாந்தங்களைத் தொகுத்துக் கூறும் ஒரு தமிழ்நூல். சில செய்யுள்களே மேற்கோளாகக் காணப்படுவதன்றி இந்நூலினபிற விடயங்கள் ஒன்றும் புலப்படவில்லை. [மணி]

சித்தார்த்தர் — இருபத்தேழு புத்தர்களில் பத்தொன்பதாகத் தோன்றியவர்.

சித்தார்த்தாதேவி — சுயம்வர ராசன் மனைவி. அபிநந்தனரென்னு நான்காவது ஜைனதீர்த்தங்கரரின் தாய்.

சித்திபுத்திகள் — விநாயகர் சத்திகள். விசுவரூபன் புதல்வியர். மயன் புதல்வியரென்றுஞ் சொல்லப்படுவர். இலக்ஷன் லாபன் எனும் புதல்வரைப்பெற்றவர்.

சித்திபுரம் — சேரராசன் நகரம். [மணி]

சித்திரகன் — விருஷ்ணி வமிசத்திற் பிறந்த ஒரு யாதவன்.

சித்திரகுப்தன் — இயமன் கணிகன். மாநுடர்செய்யும் புண்ணிய பாவங்களைக் கணக்கிட்டு வைப்பவனென்பர்.

சித்திரகூடம் — வான்மீகி முனிவராசிரமம். சிருங்கிபேர புரத்தின் தென்மேற்கிலுள்ளது. இஃதிக்காலத்தில், பண்டல்கண்டெனவழங்கும். இஃதொருமலை.

சித்திரகேதன் — (1) யது மரபினன். வசுதேவனுக் கிளவலாகிய தேவபாகனுக்கு ஜேஷ்ட குமாரன். (2) சூரசேனதேசத்தரசன். பல மனைவியருடன் கூடி வாழ்ந்து சந்ததியின்றிப் பன்னாள்செய்த அருந்தவத்தாலுதித்த ஒரு ஆண்மகவை அம்மங்கையர் பகைமையால்மருந்தூட்டிக்கொல்ல, புத்திர சோகத்திலாழ்ந்து வருந்துகையில், தனபாலுற்ற நாரத முனிவரும் அங்கிரச முனிவருஞ் செய்த ஞானோபதேசத்தாற் சோகநீங்கிப் பரமஞானியாய் வித்தியாதர வுருவேற்றுத் திருக்கைலாயமடைந்துஉமாசமேதராய சிவ பெருமானைத் தரிசித்து, சர்வலோக சரண்யராகிய தேவரீரே பெண்ணுடன் கலந்திருக்கலாமோவென உல்லங்கனமாகக்கேட்டு, அத்தீமையால் அசுர வடிவேற்று விருத்திரா சுரனாகத் தோன்றி இந்திரனாற் கொல்லப்பட்டு முத்தியடைந்தவன்.

சித்திரசபை — சிவபெருமான் நடனஞ்செய்த பஞ்சசபைகளிலொன்று. இது திருநெல்வேலியிலுள்ள திருக்குற்றாலத்திலுள்ளது.

சித்திரசேனபாண்டியன் — சித்திரவர்மபாண்டியனுக்குப் பின் மதுரையை யாண்ட பாண்டியன்.

சித்திரசேனன்—(1) துர்யோதனன் தம்பியரிலொருவன். (2) ஒரு கந்தர்வன். அர்ச்சுனனுக்கு நண்பன். பாண்டவர் துவைதவனத்தில் வசிக்கையில், துரியோதனாதியர் பாண்டவரைக்கண்டு பரிகசிக்க விரும்பி அங்குற்று, அவர்கள் வசித்த குளத்தின் மறுகரையில் தங்க, இக்கந்தர்வன் தூதர் அங்கிருந்து போகவெனக்கூற, தடுத்தமையின் அவர்களை யெல்லாம் ஸ்திரீகளுடன் சிறைசெய்தனர். தருமருணர்ந்து அவர்களை யெல்லாம் விடுவித்தனர். அர்ச்சுனனுக்கு நண்பன். (3) கர்ணன்புத்திரன் (4) ஜராசந்தனுக்குநண்பன். (5) நரிஷ்யந்தன்புதல்வரிலொருவன் (6) மதுரையையாண்ட இருபத்தெட்டாம் பாண்டியன்.

சித்திரதரன்— (1) சோபனபுரத்தரசன். (2) போதனபுரத்திலிருந்த ஒருசிற்பன். [சூளா]

சித்திரத்துவசபாண்டியன்— சித்திரபூஷணபாண்டியனுக்குப்பின் மதுரையை யாண்ட இருபத்தாறும் பாண்டியன்.

சித்திரபூஷணபாண்டியன்— சித்திரவிரதபாண்டியனுக்குப் பின் மதுரையையாண்ட இருபத்தைந்தாம் பாண்டியன்.

சித்திரம்—சிற்பநூல் முப்பத்திரண்டனுளொன்று.

சித்திரரதன்—(1) முனியின் மைந்தன். கந்தர்வன். (2) யதுமரபினன் பெரு சங்கன் புத்திரன். இவன் மகன் சசிவிந்தன். (3) துர்யோதனன் தம்பியரிலொருவன். (4) அதிவிரதன் மகன். (5) ஸ்ரீநீலராசகுமாரன்.

சித்திரரேகை—(1) குபேரன்மனைவி. சித்திராங்கவி யென்றும் பெயருடையவள் (2) வாணாசுரன் மகளாகிய உஷையின் தோழி. இவள் வாணாசுரன் மந்திரி கவந்தன் புத்திரி. சித்திரமெழுதலில் வல்லவள் இவளே அநிருத்தன் படமெழுதிக் காட்டி அவளை மோகிப்பித்தவள்.

சித்திரவர்மபாண்டியன் — மதுரையில் சித்திரத்துவச பாண்டியனுக்குப்பின அரசுசெலுத்திய இருபத்தேழாம்பாண்டியன்.

சித்திரவாகன்—பாண்டியர் மரபில் மணலூர் புரத்திருந் தரசுசெய்தவன். பப்பிருவாகன் இவன் மகளாகிய சித்திராங்கதைக்கு மகன். பாரதப்போரில் பாண்டவர் பக்கலிலிருந்தவன். இவனைச் சித்திரவாகனனென்பதுமுண்டு.

சித்திரவிக்கிரமபாண்டியன்—சித்திரசேனபாண்டியனுக்குப் பின் மதுரையையாண்ட இருபத் தொன்பதாம்பாண்டியன்.

சித்திரவிரதபாண்டியன்—சுகுணசேகரபாண்டியனுக்குப் பின் மதுரையையாண்ட இருபத்து நான்காம் பாண்டியன்.

சித்திரன்—கனகவிசயற்குத் துணைவனான ஓரரசன். [சிலப்]

சித்திராங்கதன்—(1) சந்திர மரபி

னன். திருதராட்டிரன் பெரிய தந்தை. விசித்திரவீரியனுக்கு மூத்தவன். (2) ஒருகந்தர்வன். தன்காலத்தில் தன பெயரால் விளங்கிய (திருதராட்டிரன் பெரிய தந்தையென) மேம்லகாட்டிய அரசனைக் கொன்றவன். (3) தர்ம்யோதனன் பியரிலொருவன்.

சித்திராங்கதை—சித்திரவாகன் புத்திரி. அர்ச்சுனன மனைவியரி லொருத்தி. பப்பிருவாகனைப் பெற்றவள். இவளுக்கு அலவி யெனறும் நாமாந்தரம.

சித்திராங்கி—ராஜராஜ நரேந்திரன் காமக்கிழத்தியரிலொருத்தி.

சித்திராதேவி—குபேரனமனைவி. இவளுக்குச் சித்திரரகை யெனறும் பெயர்.

சித்திராபதி — மாதவியின் நற்றாய் [சில] மணிமேகலையை உதயகுமரனோடு கூட்டுதற்குப் பல்வகையில முயன்றவள. மிகக விரகினள்.

சித்திராயுதன்—ஒருகந்தருவன.

சித்ரோபலை—ஒருநதி. இது இருக்ஷகிரியினின்று வருவது.

சினிவாலி—தாலுதமனைவி.

சிந்தாதேவி—சரசுவதிதேவி. இவளுக்குத் தென்மதுரையில் கலாதேவி நியமமென்னும் ஆலயமொன் றுள்ளது. இவள் ஆபுத்திரனுக்கு அமுத சுரபியை யளித்தவள். இவளைச் சிந்தாவிளக்கென்றுங் கூறுவர்.

சிந்தாமணி— (1) நவந்திகளி லொன்று. (2) சங்கமருவிய ஐம்பெருங் காப்பியங்களி லொன்று. சீவகசிந்தாமணியிற்காண்க.

சிந்தாவிளக்கு-சிந்தாதேவியிற் காண்க.

சிந்தியம்—இருபத தெட்டுச் சிவாகமங்களிலொன்று. இது சிவபிரானுக்குத் திருவடி விரல்களும ஆறு உபபேதங்களும் இலக்ஷங்கிரந்தமுமாகவுள்ளது.

சிந்து-மேற்கடலிற்பாய்வதொருநதி.

சிந்துத்வீபன்—இக்ஷ்வாகு மரபினன். அயுதாயுவின் பிதா. சிந்து தேச மனனன்.

சிபி—உசீநரன் ஜேஷ்ட குமாரன். இவன் யாகஞ்செய்கையில் இவன் குணத்தைச் சோதிக்கக்கருதியஇந்திரன பருந்தாகவும் அக்கினி புறாவாகவும் வடிவேற்று, பருந்துபுறாவைத துரததிச்செல்ல, புறா இவனிடததடைக்கலம் புக, அதற்கு அபயங்கொடுப்ப, பருந்து அங்கணைந்து அதனைவிடுமாறுகேட்க,என்னடைக்கலம்புக்கதைவிடே னெனப் பருந்து என மாமிசஇரையைவிட்டுவிடுகவென, இவன் அதனை விடேன். அவ்வெடை யுள்ள மாமிசம் என்னுடலி னின்று தருவேனென்று கூறித் தலைகாட்டி ஒரு தட்டில் அதனையிட்டுத் தன் மாமிசத்தல் சிறிது சிறிதரிந்து மறுதட்டிலிட்டுச் சரிவரானமையின் தானே நின்று சமனுக்கி என்னை யுண்கவெனறவன. அக்காலத்தில் இந்திரனும அக்கினியும் வியந்து தம் நிஜவடிவு காட்டிப் பலவாறு புகழ்ந்து பலவரஙகளளிக்கப்பெற்றவன். இவனுக்கு நால்வர்புத்திரர். அவர் விருஷதர்ப்பன் சுவீரன கேகயன் மத்திரனெனப் படுவோர். (2) பிரகலாதன் புத்திரரிலொருவன்.

சிம்சுபாயன்—ஒருபௌராணிகன்.

சிம்சுமாரசக்கரம் — மகர வடிவாகவுள்ள ஒரு சோதி சக்கரம்.

**சிம்மபலன்**—கீசகன். விராடராஜன் மைத்துனன். வீமசேனனாற்கொல்லப்பட்டவன் கீசகனிற்காண்க.

**சிம்மமுகாசுரன்**—சிங்கமுகாசுரனிற் காண்க.

**சிம்ஹிகை**—(1) திதிபுத்திரி. விப்பிரசித்திபாரியை. இவள் தக்ஷன் மகளென்றும் கசியபன் மனைவியென்றும் நூல்கள் மாறுபட்டுக் கூறும். (2) இரணிய கசிபன் புத்திரிகளிலொருத்தி. (3) ஓரரக்கி. சாயாக்கிராகிணி. இலங்கிணி யென்றும் பெயருடையாள். இலங்கையில் வடவாசல் காத்திருந்து அனுமனாற் கொல்லப்பட்டவள்.

**சியவனன்**—பிருகுபுத்திரன். இவன் தாய் புலோமை சுகன்னிகைகணவன். இவன் குஷ்டரோகம் அசுவினிதேவரால் தீரப் பெற்றவன். அந்நன்றிக்காகத் தன்மாமனான சரியாதியைக் கொண்டு யாகத்தில் அவர்கட்கு அவிகொடுப்பித்தவன். அசுவினி தேவரிற் காண்க. இவன மகன் ருரன்.

**சியாமகன்**—யதுமரபினன். வசுதேவன் தம்பியரிலொருவன்.

**சியாமரஸ்மி**—கபிலர் சீடனாகிய ஓரிருடி. வேதம்பிரமாணநூலன்றென்றையுற்று, இறுதியில் அம்முனிவராற் றேற்றப்பட்டவன்.

**சியாமளாதேவி**—(1) இயமன்மனைவி. (2) உச்சிஷ்டை.

**சியேனி**—அருணன் மனைவி. கசியபன்மனைவி யென்றுஞ் சொல்லப்படுவள். சம்பாதி சடாயுக்களைப் பெற்றவள்.

**சிரகாரி**—இராக்கதன். ஒருகாலத்தில் இவன் பிதா தன் மனைவி மேற கோபங்கொண்டு அவளை வெட்டும்படி யிவனுக்குக் கட்டளையிட, தானெனக்கருதித் தாமதித்து நிற்கையில் அவன் கோபநீங்கிக் களித்து இப்பெயரிட்டனன். [சிரம்=தாமசம்; காரி—செய்பவன்]

**சிரத்தாவதி**—வருணன் இராஜதானிநகரம்.

**சிரத்தை**—(1) தருமன் மனைவி. இயமனதாய். (2) வைவசுவத மநுவின் மனைவி.

**சிரபுரம்**—சீகாழியின் பன்னிரு பெயர்களிலொன்று. பாற்கடல் கடைந்து அமுதம் பகுக்கையில் தேவரோடு சேர்ந்து அமுதுண்டு, சூரிய சந்திரர்களுணர்த்தத் திருமால் வெகுண்டு தமது கையிலிருந்தசட்டுவத்தால் வெட்டுண்ட அசுரர்களிருவர் சிரங்களும் அமுதுண்டமையாலழியாது இராகுகேதுவாக வழிபட்டமையின் இப்பெயராயது [இராகுகேதுவிற்காண்க]

**சிரலை**—சிச்சிலியிற்காண்க.

**சிரவணத் துவாதசி** — திருவோண நக்ஷத்திரத்துடன் சேர்ந்த துவாதசி. இதுவே விஷ்ணுவாமனவதாரஞ் செய்த தினமாகலின், இஃதொரு விரததினம்.

**சிரவணன்**—முராசுரன்மகன். கண்ணனாற் கொல்லப்பட்டவன்.

**சிராயு**—பிரமசத்தன்பிதா.

**சிராத்ததேவன்**—சூரியனுக்குஞ் சஞ்ஞிகைக்கும் பிறந்த புதல்வன்.

**சிராவணம்**—(1) ஒரு நக்ஷத்திரம். இது திருவோணமென்று சொல்லப்படும். (2) ஒரு விரததினம். இது ஆவணிமாசசிராவணம். அன்று உபவீததாரணஞ் செய்வதுவழக்கம்.

சிராவிதம்—தசரத ராமன் குமாரனு ியலவன் ராஜதானி நகரம்.

சிருகாலவாசுதேவன் — மதுராபுரிக் கருகிலுள்ள கரவீரபுரத்து மன்னன். கண்ணனுடன் தீராப்பகை கொண் டிருந்தமையின் கண்ணனுற் கொல்லப்பட்டவன். அக்காலத்தில் கண்ணனே இவன் மகனை யரசனுக்கினன்.

சிருங்ககிரி—மைசூர் நாட்டி லுள்ள ஒருமலையின் மேலிருக்கும நகரம். சங்கரா சாரியரால் ஸ்தாபிக்கப் பட்ட சாரதா பீடமும் மடமுமுள்ளவிடம். அங்கே அநேக நூல்களையுடைய கிரந்தமண்டபமொன்றுண்டு.

சிருங்கர்—புஷ்யமித்திரன் மரபினர். மகதநாட்டுமன்னர் - இவர்கள்பதின்மர். நூற்றுப் பன்னிரு வருடம் அரசுசெய்தவர்.

சிருங்கி—(1) ஒரிருடி. சமீகன்மகன் (2) மான் வயிற்றிற் பிறந்த ஒரு முனிவன் [மணி]

சிருங்கிபேரம்—கங்கைக் கரையிலுள்ளநகரம். இது தசரதராமனுக்கு நண்பனுன குகன் பட்டணம்.

சிருஞ்சயன—(1) பர்மியாசுவன் புத்திரரிலொருவன். இவன் தவஞ்செய்து நாரத ரனுக்கிரகத்தால் பொன்னுக மலமூத்திரங்களைக் கழிக்கும் சுவர்ணஷ்டீவி யெனும் மகனைப்பெற்றனன். இதனை யுணர்ந்த கள்வர் அவன் வயிற்றிற் பொன்னிருக்குமென்று கொன்று பார்த்துப் போக, மீண்டும் நாரதரால் பிழைப்பித்தனன். (2) வசுதேவன் தம்பியரில் ஒருவன். (3) காலாகனன் மகன்.

சிருட்டம்—சிற்பநூல் முப்பத்திரண்டனுளொன்று.

சிருஷ்டியதிபதித்துவம்— இந்திரன் தேவர்களுக்கும், அக்கினி வசுக்களுக்கும், இயமன் பிதிர்களுக்கும், சிவன் பசுபூதாதிகளுக்கும், விஷ்ணு துவாதசாதித்தர்களுக்கும், வருணன் ஜலத்திற்கும், குபேரன் தனத்திற்கும்யக்ஷர்களுக்கும், சந்திரன் நக்ஷத்திரங்களுக்கும் யாகத்திற்கும் விரதத்திற்கும் ஒஷதிகளுக்கும், பிருதுசக்கரவர்த்தி பூமிக்கும், தக்ஷன்பிரஜாபதிகளுக்கும், பிரஹலாதன் தைத்தியர்களுக்கும் தானவர்களுக்கும், இமயம் மலைகளுக்கும், சமுத்திரம் நதிகளுக்கும், சித்திரரதன் கந்தர்வ வித்தியாதரகின்னரகிம்புருஷர் களுக்கும், ஐராவதம் திக்கஜங்களுக்கும், உச்சைச் சிரவக்குதிரைகளுக்கும், கருடன்பக்ஷிகளுக்கும், சிங்கம் மிருகங் களுக்கும், வாசுகி சர்ப்பங்களுக்கும்அதிபதித்துவத்தைச் சிருஷ்டி காலத்திற் பெற்றிருந்தனர்.

சிரேயாம்ஸர்-ஜைனமதஸ்தாபகரான இருபத்து நான்கு தீர்த்தங்கரரில் பதினென் ருவதாகத் தோன்றியவர்.

சிலப்பதிகாரம்—பழைய ஐம்பெருங் காப்பியங் களில் இரண்டாவது. இளங்கோவடிகளென்னுஞ் சேர முனிவராற் செய்யப் பட்டது. உரையாசிரியர் களால் எடுத்துக் காட்டப்படும் பிரமாண நூல்களில் ஒன்றுயுள்ளது. கோவலன் கண்ணகியென்பவர் சரிதைகளை விரித்துக்கூறுவது, சிலம்புகாரணமாகச் சிலதருமங்களை உலகினர்க்குணர்த்